(නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus)

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

**05.08.2019 / 1300 – 1500**

ආර්ථික විද්‍යාව I
**பொருளியல் I**
Economics I

**21 T I**

පැය දෙකයි
*இரண்டு மணித்தியாலம்*
*Two hours*

**அறிவுறுத்தல்கள் :**

- ✳ **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
- ✳ விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
- ✳ விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
- ✳ **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து. **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி (x)** இடுவதன் மூலம் காட்டுக.

**1.** ஒவ்வொரு வீட்டுத்துறையினரதும் நிறுவனங்களினதும் தீர்மானங்களைப் பற்றி ஆய்வு செய்யும் பொருளியற் துறை
(1) பேரினப் பொருளியல் (2) சிற்றினப் பொருளியல் (3) நேர்ப் பொருளியல்
(4) நியமப் பொருளியல் (5) நலப் பொருளியல் ( 2 )

**2.** நிலம், உழைப்பு, மூலதனம், முயற்சி என்னும் வள உரிமையாளர்களுக்கு வழங்கப்படும் வருமானச் செலுத்தல்களாவன முறையே,
(1) வட்டி, கூலி, வாடகை, இலாபமாகும். (2) வாடகை, கூலி, பங்கிலாபம், வட்டியாகும்.
(3) வாடகை, இலாபம், கூலி, வட்டியாகும். (4) வாடகை, கூலி, வட்டி, இலாபமாகும்.
(5) வட்டி, கூலி, பங்கிலாபம், வாடகையாகும். ( 4 )

**3.** பின்வருவனவற்றுள் கட்டளைப் பொருளாதாரமொன்றின் முக்கிய பண்பாக அமைவது எது?
(1) மூலதனத்தின் தனியார் உரிமை (2) சந்தைகளில் பெரிதும் தங்கியிருத்தல்
(3) மத்திய திட்டமிடல் (4) சந்தை சக்திகளின் ஒன்றுகுவிப்பு ( 3 )
(5) தனிப்பட்ட நன்மைகளின் அடிப்படையில் தீர்மானமெடுத்தல்

**4.** பின்வரும் வரைபடம் A என்னும் புள்ளியில் உற்பத்தி செய்யும் பொருளாதாரம் ஒன்றின் உற்பத்தி இயல்தகவு எல்லையைக் காட்டுகிறது.




Y பொருளை உற்பத்தி செய்வதற்காக இழக்கப்படும் X பொருளின் தொகை யாது?
(1) 100 (2) 200 (3) 300
(4) 400 (5) 500 ( 2 )

**5.** பின்வரும் அட்டவணை X பொருளின் விலை மாற்றத்தின் காரணமாக ஏற்படும் பதிலீட்டு விளைவு, வருமான விளைவு என்பவற்றைக் காட்டுகிறது. பின்வருவனவற்றுள் பதிலீட்டு விளைவு, வருமான விளைவு என்பவற்றைக் காட்டும் சரியான சேர்க்கை எது?

| | X பொருளின் வகை | விலை மாற்றம் | பதிலீட்டு விளைவின் காரணமாக ஏற்படும் கேள்வித் தொகை | வருமான விளைவின் காரணமாக ஏற்படும் கேள்வித் தொகை |
|---|---|---|---|---|
| (1) | இழிவுப் பொருள் | வீழ்ச்சி | குறையும் | அதிகரிக்கும் |
| (2) | இழிவுப் பொருள் | அதிகரிப்பு | குறையும் | குறையும் |
| (3) | இழிவுப் பொருள் | அதிகரிப்பு | அதிகரிக்கும் | அதிகரிக்கும் |
| (4) | சாதாரண பொருள் | வீழ்ச்சி | அதிகரிக்கும் | அதிகரிக்கும் |
| (5) | சாதாரண பொருள் | அதிகரிப்பு | அதிகரிக்கும் | குறையும் |

( 4 )

**6.** பின்வருவனவற்றுள் பொருளொன்றின் நிரம்பல் வளையியை இடப்புறமாக நகர்த்துவது எது?
(1) உற்பத்திச் செலவில் ஏற்படும் ஓர் அதிகரிப்பு
(2) உற்பத்திச் செலவில் ஏற்படும் ஒரு வீழ்ச்சி
(3) பொருளின் விலையில் ஏற்படும் ஓர் அதிகரிப்பு
(4) பொருளின் விலையில் ஏற்படும் ஒரு வீழ்ச்சி
(5) கேள்வியில் ஏற்படும் ஒரு வீழ்ச்சி

( 1 )

**7.** நபரொருவரின் வருமானம் அதிகரிக்கும்போது பொதுப்போக்குவரத்துச் சேவைக்கான அவரது கேள்வி குறைவடையுமாயின் பொதுப்போக்குவரத்து சேவை உதாரணமாக அமைவது,
(1) ஓர் இழிவுப் பொருளுக்காகும்.
(2) ஓர் இலவசப் பொருளுக்காகும்.
(3) ஒரு கிபன் பொருளுக்காகும்.
(4) ஒரு சாதாரண பொருளுக்காகும்.
(5) ஒரு பொதுப் பொருளுக்காகும்.

( 1 )

**8.** பின்வரும் வரைபடம் X பொருளின் சந்தைக் கேள்வி வளையியைக் காட்டுகிறது.




இங்கு சந்தை சமநிலையின் அளவு A புள்ளியிலிருந்து B புள்ளி வரையில் மாற்றமடைவதற்குப் பெரும்பாலும் காரணமாக அமையக் கூடியது
(1) பதிலீட்டுப் பொருளொன்றின் விலையில் ஏற்படும் ஓர் அதிகரிப்பு
(2) நுகர்வோரின் வருமானத்தில் ஏற்படும் ஓர் அதிகரிப்பு
(3) நுகர்வோரின் வருமானத்தில் ஏற்படும் ஒரு வீழ்ச்சி
(4) X பொருளின் உற்பத்திச் செலவில் ஏற்படும் ஒரு வீழ்ச்சி
(5) X பொருளின் நிரம்பலில் ஏற்படும் ஒரு வீழ்ச்சி

( 4 )

**9.** அலகொன்று ரூபா 100 விலையில் சமநிலை அடைந்துள்ள கருதுகோள் அடிப்படையிலான போட்டிச் சந்தையொன்றைக் கருதுக. தற்போது சந்தைச் சமநிலை விலை மாறாதுள்ள நிலையில் சந்தை நிரம்பல் வளையியானது எல்லா விலைகளிலும் நெகிழ்வுள்ள நிலையிலிருந்து எல்லா விலைகளிலும் நெகிழ்வற்ற நிலைக்கு மாறுவதாகக் கருதுக. இம்மாற்றம் நுகர்வோன் மிகை, உற்பத்தியாளன் மிகை என்பவற்றின் மீது ஏற்படுத்தும் விளைவு யாது?

| | நுகர்வோன் மிகை | உற்பத்தியாளன் மிகை |
|---|---|---|
| (1) | அதிகரிக்கும் | வீழ்ச்சியடையும் |
| (2) | அதிகரிக்கும் | மாற்றமில்லாதிருக்கும் |
| (3) | மாற்றமில்லாதிருக்கும் | அதிகரிக்கும் |
| (4) | மாற்றமில்லாதிருக்கும் | மாற்றமில்லாதிருக்கும் |
| (5) | வீழ்ச்சியடையும் | அதிகரிக்கும் |

( 3 )

**10.** பின்வரும் வரைபடத்தில் சாதாரண பொருளொன்றின் சந்தைக் கேள்வி, நிரம்பல் வளையிகள் காட்டப்பட்டுள்ளன.




இங்கு சமநிலை விலையானது $P_1$ இலிருந்து $P_2$ வாக அதிகரிப்பதற்கு ஏதுவாக அமைவது
(1) நுகர்வோனின் வருமானம் அதிகரித்தல்
(2) நிரப்புப் பொருளொன்றின் விலை அதிகரித்தல்
(3) உற்பத்திச் செலவு கணிசமானளவு குறைவடைதல்
(4) உற்பத்தி மீதான மானியங்கள் அதிகரித்தல்
(5) விலை $P_2$ சட்ட ரீதியான உச்ச விலையாகத் தீர்மானிக்கப்படுதல்

( 1 )

**11.** தனியார் உயர்கல்வி நிறுவனமொன்று ஆரம்பத்தில் அதன் மாணவர்களுக்கு இணைய வசதிகளைக் கட்டணங்களின்றி வழங்கியதாகக் கருதுக. பின்னர் நிறுவனம் இணையப் பயனாளர்களிடமிருந்து மணித்தியாலத்திற்கு ரூபா 100 கட்டணம் அறவிடத் தீர்மானித்தது. இணைய சேவைகளுக்கான மாணவர்களின் கேள்வி வளையி பின்வரும் வரைபடத்தில் காட்டப்பட்டுள்ளது.




கட்டணமொன்றை அறவிடத் தீர்மானித்த பின்னர் இழக்கப்பட்ட நுகர்வோன் மிகையின் பெறுமதி

(1) ரூபா 90 000
(2) ரூபா 45 000
(3) ரூபா 40 000
(4) ரூபா 10 000
(5) ரூபா 5 000

( 3 )

**12.** பின்வரும் அட்டவணையானது குறித்தவொரு நுகர்வுப் பொருளின் உற்பத்தி மீது ஓர் அலகு வரிவிதிப்புக்கு முன்னரும் பின்னருமான கேள்வி, நிரம்பல் பற்றிய தகவல்களைக் காட்டுகிறது.

| விலை (ரூபா) | கேள்வித் தொகை | வரிக்கு முந்திய நிரம்பல் தொகை | வரிக்குப் பிந்திய நிரம்பல் தொகை |
|---|---|---|---|
| 65 | 650 | 550 | 450 |
| 70 | 650 | 600 | 500 |
| 75 | 650 | 650 | 550 |
| 80 | 650 | 700 | 600 |
| 85 | 650 | 750 | 650 |
| 90 | 650 | 800 | 700 |
| 100 | 650 | 850 | 750 |

அலகு வரியின் அளவும் வரிக்குப் பிந்திய விலை மாற்றமும் யாவை?

(1) வரி ரூபா 10, விலை மாற்றம் ரூபா 5
(2) வரி ரூபா 10, விலை மாற்றம் ரூபா 10
(3) வரி ரூபா 50, விலை மாற்றம் ரூபா 75
(4) வரி ரூபா 50, விலை மாற்றம் ரூபா 85
(5) வரி ரூபா 10, விலை மாற்றம் ரூபா 80

( 2 )

**13.** பின்வரும் வரைபடம் விவசாயப் பொருளொன்றுக்கு நிலவும் போட்டிச் சந்தையொன்றைக் காட்டுகிறது.




அரசாங்கம் இப்பொருளின் உற்பத்தியாளர்களுக்கு அலகு மானியமொன்றை வழங்கினால், உற்பத்தியாளர்களுக்கும் நுகர்வோருக்குமிடையே பொருளாதார மிகை எவ்வாறு பகிரப்படும்?

(1) பொருளாதார மிகையின் அதிகளவு நுகர்வோரைச் சென்றடையும்.
(2) பொருளாதார மிகையின் அதிகளவு உற்பத்தியாளர்களைச் சென்றடையும்.
(3) பொருளாதார மிகை முழுமையாக உற்பத்தியாளர்களைச் சென்றடையும்.
(4) பொருளாதார மிகை முழுமையாக நுகர்வோரைச் சென்றடையும்.
(5) பொருளாதார மிகையானது நுகர்வோர், உற்பத்தியாளர் ஆகியோரிடையே சமமாகப் பகிரப்படும்.

( 2 )

**14.** பயனுறுதிவாய்ந்த குறைந்தபட்ச விலை ஒன்றை விதிக்கும்போது,

(1) நுகர்வோர் மிகையும் உற்பத்தியாளர் மிகையும் அதிகரிக்கும்.
(2) நுகர்வோர் மிகை அதிகரிப்பதுடன் உற்பத்தியாளர் மிகை குறைவடையும்.
(3) நுகர்வோர் மிகையும் உற்பத்தியாளர் மிகையும் குறைவடையும்.
(4) நுகர்வோர் மிகை குறைவடைவதுடன் உற்பத்தியாளர் மிகை அதிகரிக்கும்.
(5) நுகர்வோர் மிகையும் உற்பத்தியாளர் மிகையும் மாற்றமில்லாது காணப்படும்.

( 4 )

**15.** தரப்படுத்தப்பட்ட அல்லது வேறாக்கம் செய்யப்பட்ட பொருளொன்றை உற்பத்தி செய்யும் சிறு எண்ணிக்கையிலான நிறுவனங்களை உள்ளடக்கிய கைத்தொழில்,

(1) போட்டிக் கைத்தொழில் எனப்படும்.
(2) சிலருரிமைக் கைத்தொழில் எனப்படும்.
(3) தனியுரிமைப் போட்டிக் கைத்தொழில் எனப்படும்.
(4) தனியுரிமைக் கைத்தொழில் எனப்படும்.
(5) தூய போட்டிக் கைத்தொழில் எனப்படும்.

( 2 )

**16.** நிறுவனம் ஒன்று நிலையான அளவு மூலதனத்துடன் மாறும் எண்ணிக்கையிலான ஊழியத்தைப் பயன்படுத்தி உற்பத்தியில் ஈடுபடுவதாகக் கருதுக. இங்கு ஊழியத்திற்கு வழங்கப்படும் நாளாந்த கூலி அதிகரிக்குமாயின், நிறுவனத்தின் செலவுகளை அது எவ்வாறு பாதிக்கும்?

| | மொத்த மாறும் செலவு | மொத்த நிலையான செலவு | மொத்தச் செலவு |
|---|---|---|---|
| (1) | குறைவடையும் | மாற்றமில்லாதிருக்கும் | குறைவடையும் |
| (2) | குறைவடையும் | குறைவடையும் | குறைவடையும் |
| (3) | அதிகரிக்கும் | குறைவடையும் | மாற்றமில்லாதிருக்கும் |
| (4) | அதிகரிக்கும் | மாற்றமில்லாதிருக்கும் | அதிகரிக்கும் |
| (5) | அதிகரிக்கும் | அதிகரிக்கும் | அதிகரிக்கும் |

( 4 )

**17.** வாழைப்பழ உற்பத்தியில் ஈடுபட்டுள்ள விவசாயி ஒருவர் நிறைபோட்டிச் சந்தையில் இயங்குகிறார் எனக் கருதுக. சந்தை விலை வீழ்ச்சியடையுமாயின் குறுங்காலத்தில் அவ் விவசாயி செய்ய வேண்டியது

(1) புதிய விலை சராசரி மொத்தச் செலவுக்குச் சமமாகும் வரையில் உற்பத்தியை அதிகரித்தல்
(2) விலை வீழ்ச்சியை ஈடுசெய்யும் வகையில் உற்பத்தியை அதிகரித்தல்
(3) புதிய விலையானது எல்லை வருவாயை விடக் குறைவாக இருப்பின் உற்பத்தியை நிறுத்துதல்
(4) புதிய விலையானது சராசரி நிலையான செலவினை ஈடுசெய்யுமானால் மட்டும் உற்பத்தியைத் தொடர்தல்
(5) புதிய விலையானது சராசரி மாறும் செலவினை ஈடுசெய்யுமானால் மட்டும் உற்பத்தியைத் தொடர்தல் ( 5 )

**18.** நிறைபோட்டிக் கைத்தொழிலில் இயங்கும் ஒரு நிறுவனம் மாத்திரம் தொழில்நுட்ப முன்னேற்றத்தை அனுபவிப்பதால் அந்நிறுவனத்தின் உற்பத்திச் செலவு குறைவடையுமாயின், பின்வருவனவற்றுள் எது நிறுவனத்தின் விலை, வெளியீடு, இலாபம் என்பவற்றின் மீதான விளைவுகளைச் சரியாக விபரிக்கிறது?

| | விலை | வெளியீடு | இலாபம் |
|---|---|---|---|
| (1) | குறையும் | குறையும் | குறையும் |
| (2) | குறையும் | அதிகரிக்கும் | அதிகரிக்கும் |
| (3) | மாற்றமில்லாதிருக்கும் | குறையும் | அதிகரிக்கும் |
| (4) | மாற்றமில்லாதிருக்கும் | அதிகரிக்கும் | அதிகரிக்கும் |
| (5) | அதிகரிக்கும் | அதிகரிக்கும் | அதிகரிக்கும் |

( 4 )

**19.** வர்த்தகச் சகடோட்டத்தின் எந்தக் கட்டம் பெரும்பாலும் அதிகரித்துச் செல்லும் நேர்க்கணிய உற்பத்தி இடைவெளியைக் கொண்டிருக்கும்?

(1) செழிப்பு / பூரிப்பு
(2) பின்னடைவு
(3) விரிவாக்கம்
(4) அதிதாழ்ந்த புள்ளி
(5) சுருக்கம்

( 3 )

**20.** பின்வருவனவற்றுள் அடிப்படை விலைகளிலான மொத்த பெறுமதிச் சேர்க்கையில் (GVA) உள்ளடக்கப்பட்டிருக்கும் கூறு எது?

(1) இடைநிலை நுகர்வு
(2) கையிருப்புத் தொகை மாற்றம்
(3) பெறுமதி வாய்ந்த ஆதனங்களைக் கையகப்படுத்துதல்
(4) உற்பத்திப் பொருள் மீதான வரிகளிலிருந்து மானியங்களைக் கழித்து வரும் பெறுமதி
(5) உற்பத்தியின் மீது விதிக்கப்பட்ட ஏனைய வரிகளிலிருந்து மானியங்களைக் கழித்து வரும் பெறுமதி ( 5 )

**21.** செலவீட்டு அணுகுமுறையில் ஒரு நாட்டின் மொத்த உற்பத்தியைக் கணிப்பிடும்போது பின்வரும் வீட்டுத்துறைக் கொள்வனவுகளில் எது மொத்த தனியார் முதலீட்டின் ஒரு கூறாகக் கணிப்பிடப்படும்?

(1) இறைமை முறிகள்
(2) கம்பனிப் பங்குகள்
(3) முதலீட்டு வங்கியொன்றினால் விநியோகிக்கப்பட்ட கடன் பத்திரங்கள்
(4) தனிப்பட்ட பயன்பாட்டிற்கான புதிய மோட்டார் வாகனம்
(5) புதிதாக நிர்மாணிக்கப்பட்ட ஒரு வீடு

( 5 )

**22.** பின்வருவனவற்றுள் சொத்து வருவாயாகக் கருதப்படுவது எது?
(1) கூலிகளும் சம்பளங்களும்
(2) வட்டி
(3) ஊழியர் சேமலாபநிதிக்கான தொழில் வழங்குநரின் பங்களிப்பு
(4) ஆயுள் காப்புறுதி தவிர்ந்த காப்புறுதிக் கோரிக்கைகள்
(5) மானியங்கள்
( 2 )

**23.** ஒரு பொருளாதாரத்தில் தன்னிச்சையான நுகர்வு ரூபா 600 மில்லியன் எனவும் அதன் எல்லைச் சேமிப்பு நாட்டம் 0.2 எனவும் கருதுக. இப்பொருளாதாரத்தில் செலவிடத்தக்க மொத்த தேசிய வருமானம் ரூபா 1000 மில்லியனால் அதிகரிக்குமாயின், நுகர்வுச் செலவீட்டு அதிகரிப்பின் அளவு
(1) ரூபா 200 மில்லியன்
(2) ரூபா 600 மில்லியன்
(3) ரூபா 800 மில்லியன்
(4) ரூபா 1 400 மில்லியன்
(5) ரூபா 1 600 மில்லியன்
( 3 )

**24.** பின்வரும் அட்டவணை கருதுகோள் ரீதியான ஒரு பொருளாதாரத்தில் நுகர்வு (C), செலவிடத்தக்க மொத்த தேசிய வருமானம் ($Y_D$) என்பன பற்றிய தேசியக் கணக்கீட்டுத் தரவுகளைக் காட்டுகிறது.

| வருடம் | நுகர்வு (மில்லியன் ரூபா) | செலவிடத்தக்க மொத்த தேசிய வருமானம் (மில்லியன் ரூபா) |
|---|---|---|
| 1 | 800 | 1 000 |
| 2 | 960 | 1 200 |

மூன்றாவது வருடத்தில் தேறிய ஏற்றுமதிகளில் ஏற்பட்ட ஓர் அதிகரிப்பு தேசிய பொருளாதாரத்தை ரூபா 300 மில்லியனால் விரிவடையச் செய்தது. ஏனையன மாறாத நிலையில் தேறிய ஏற்றுமதிகளில் ஏற்பட்ட அதிகரிப்பு யாது?
(1) ரூபா 300 மில்லியன்
(2) ரூபா 160 மில்லியன்
(3) ரூபா 100 மில்லியன்
(4) ரூபா 80 மில்லியன்
(5) ரூபா 60 மில்லியன்
( 5 )

**25.** குறுங்கால மொத்த நிரம்பல் வளையியானது,
(1) வலப்புறமாகக் கீழ்நோக்கிச் சரிந்து செல்லும்.
(2) வலப்புறமாக மேல்நோக்கிச் சரிந்து செல்லும்.
(3) கிடையச்சுக்குச் சமாந்தரமாகச் செல்லும்.
(4) குத்தச்சுக்குச் சமாந்தரமாகச் செல்லும்.
(5) நிறைதொழில் மட்டத்திற்குக் கீழுள்ள வெளியீட்டு மட்டங்களில் சரிவு கூடியதாக இருக்கும்.
( 2 )

**26.** பின்வருவனவற்றுள் பொருளாதாரமொன்றின் பணநிரம்பலை வீழ்ச்சியடையச் செய்வதில் செல்வாக்குச் செலுத்தும் காரணி எது?
(1) வருமானவரி வீதங்களில் ஏற்படும் ஒரு வீழ்ச்சி
(2) கழிவீட்டு வீதத்தில் ஏற்படும் ஒரு வீழ்ச்சி
(3) மத்திய வங்கியினால் திறந்த சந்தையில் அரசாங்க முறிகள் கொள்வனவு செய்யப்படல்
(4) நியதி ஒதுக்குத் தேவையில் ஏற்படும் ஓர் அதிகரிப்பு
(5) பொருள்கள் சேவைகள் மீதான அரசாங்கச் செலவீட்டில் ஏற்படும் ஓர் அதிகரிப்பு
( 4 )

**27.** பொருளாதாரமொன்று நிறைதொழில் மட்டத்தில் உள்ளபோது குறுங்காலத்தில் பின்வருவனவற்றுள் எது பெரும்பாலும் கேள்வித்தூண்டல் பணவீக்கத்தை உருவாக்கும்?
(1) கொள்கை வட்டிவீதங்களில் ஏற்படும் ஓர் அதிகரிப்பு
(2) தனிநபர் வருமானவரிகளில் ஏற்படும் ஓர் அதிகரிப்பு
(3) மெய்வட்டி வீதத்தில் ஏற்படும் ஒரு வீழ்ச்சி
(4) அரசாங்க செலவீட்டில் ஏற்படும் ஒரு வீழ்ச்சி
(5) பண நிரம்பலில் ஏற்படும் ஒரு வீழ்ச்சி
( 3 )

**28.** எல்லா வங்கிகளும் சட்டத்தினால் தேவைப்படுத்தப்பட்ட குறைந்தபட்ச ஒதுக்குகளை மாத்திரம் பேணுவதாகவும் வங்கித்துறையிலிருந்து பண வெளிப்பாய்ச்சல்கள் எதுவும் இடம்பெறவில்லை எனவும் கருதுக. சட்டரீதியான ஒதுக்குத் தேவை 10% ஆகும். வாடிக்கையாளர் ஒருவர் தனது நடைமுறைக் கணக்கில் ரூபா 1 000 ஐ வைப்புச் செய்வாராயின், மொத்த பணநிரம்பலில் ஏற்படக்கூடிய மிகக்கூடிய அதிகரிப்பு யாது?
(1) ரூபா 100
(2) ரூபா 1 000
(3) ரூபா 9 000
(4) ரூபா 10 000
(5) ரூபா 11 000
( 3 )

**29.** அரசாங்கம் ஏககாலத்தில் விரிவாக்கப் பணக்கொள்கையையும் விரிவாக்க அரச இறைக் கொள்கையையும் கையாளுமாயின், வட்டிவீதம், வேலையின்மை என்பவற்றில் எவ்வாறான தாக்கம் ஏற்படும்?

| | **வட்டி வீதம்** | **வேலையின்மை** |
|---|---|---|
| (1) | அதிகரிப்பு | நிர்ணயிக்க முடியாது |
| (2) | அதிகரிப்பு | வீழ்ச்சி |
| (3) | வீழ்ச்சி | நிர்ணயிக்க முடியாது |
| (4) | நிர்ணயிக்க முடியாது | வீழ்ச்சி |
| (5) | நிர்ணயிக்க முடியாது | அதிகரிப்பு |

( 4 )

**30.** ஒரு வணிக வங்கியில் மேற்கொள்ளப்படும் ரூபா 300 மில்லியன் வைப்பானது பணநிரம்பலில் ரூபா 3000 மில்லியன் அதிகரிப்புக்கு இட்டுச் செல்லுமாயின், இருந்திருக்க வேண்டிய ஒதுக்கு வீதம்
(1) 0.10% (2) 0.12% (3) 10 % (4) 12% (5) 100 %

( 3 )

**31.** ஒரு பொருளை உற்பத்தி செய்யும்போது எதிர்க்கணிய வெளிவாரி காணப்படுமாயின், சமூகரீதியில் உத்தம வெளியீட்டினளவினை அடையக்கூடியது,
(1) தாராள சந்தைச் சமநிலையின் மூலமாகும்.
(2) வெளியீட்டின் உற்பத்திக்கு மானியம் வழங்குவதன் மூலமாகும்.
(3) உற்பத்தி செய்யப்படும் பொருள் தொகையைக் கட்டுப்படுத்துவதன் மூலமாகும்.
(4) அரசாங்கம் அப்பொருளைக் கொள்வனவு செய்வதன் மூலமாகும்.
(5) உற்பத்தி செய்யத்தக்க குறைந்தபட்ச தொகையினை நிர்ணயிப்பதன் மூலமாகும்.

( 3 )

**32.** ஒரு தூய பொதுப் பொருளை மேலதிகமாக ஒருவரைப் பயன்படுத்த அனுமதிப்பதன் எல்லைச் செலவு,
(1) நேர்க்கணியம் ஆகும். (2) எதிர்க்கணியம் ஆகும். (3) பூச்சியம் ஆகும்.
(4) முடிவிலி ஆகும். (5) நுகர்வு அதிகரிப்போடு அதிகரிக்கும்.

( 3 )

**33.** மேன்மைப் பொருள் என்பது,
(1) பெற்றுக்கொள்வோனுக்கும் சமூகத்திற்கும் நன்மை பயக்கும் பொருளாகும்.
(2) உற்பத்தியில் சமூகச் செலவைக் கொண்டிராத பொருளாகும்.
(3) நுகர்வதன் தனியார் நன்மை அதன் சமூக நன்மையை விட உயர்வாக இருக்கும் பொருளாகும்.
(4) சந்தைச் சக்திகளூடாக வழங்கப்பட முடியாத பொருளாகும்.
(5) சந்தைச் சக்திகளூடாக வினைத்திறனுள்ள வகையில் வழங்கப்படக்கூடிய பொருளாகும்.

( 1 )

**34.** அரசாங்க வரவுசெலவுத்திட்டத்தில் 'ஆரம்ப கணக்கு நிலுவை' என்பதன் மூலம் வரையறுக்கப்படுவது,
(1) வரி வருவாய்களுக்கும் மூலதனச் செலவீடுகளுக்கும் இடையிலான வித்தியாசமாகும்.
(2) கொடைகள் உள்ளடங்கலான மொத்த வருவாய்களுக்கும் கடன்கள் மீதான வட்டிச் செலுத்தல்கள் நீங்கலான மொத்தச் செலவீட்டிற்கும் இடையிலான வித்தியாசமாகும்.
(3) மொத்த வருவாய்களுக்கும் கடன் மீளச் செலுத்தல்கள் உள்ளடங்கலான மொத்த செலவீட்டிற்கும் இடையிலான வித்தியாசமாகும்.
(4) வரிவருவாய்களுக்கும் மீளெழும் செலவீடுகளுக்கும் இடையிலான வித்தியாசமாகும்.
(5) மொத்த வருவாய்களுக்கும் மீளெழும் செலவீடுகளுக்கும் இடையிலான வித்தியாசமாகும்.

( 2 )

**35.** தற்போது இலங்கை அரசாங்கத்தின் மீளெழும் செலவீடுகளின் மிகப் பெரிய கூறாக அமைவது
(1) வட்டிச் செலுத்தல்களாகும். (2) சம்பளங்களும் கூலிகளுமாகும்.
(3) ஓய்வூதியச் செலுத்தல்களாகும். (4) உர மானியமாகும்.
(5) அரச கூட்டுத்தாபனங்களுக்கான நடைமுறை மாற்றல்களாகும்.

( 1 )

**36.** 'ஒப்பீட்டு நன்மை' என்பது, ஒரு நாடு குறித்த ஒரு பொருளை,
(1) மற்றைய நாட்டை விட அதிகளவில் உற்பத்தி செய்ய முடியும் என்பதாகும்.
(2) மற்றைய நாட்டை விடக் குறைந்த எல்லைச் செலவில் உற்பத்தி செய்ய முடியும் என்பதாகும்.
(3) மற்றைய நாட்டை விடக் குறைந்த நீண்டகால சராசரி மொத்தச் செலவில் உற்பத்தி செய்ய முடியும் என்பதாகும்.
(4) மற்றைய நாட்டை விடக் குறைந்த அமையச் செலவில் உற்பத்தி செய்ய முடியும் என்பதாகும்.
(5) இன்னொரு பொருளை விட அதிகளவில் உற்பத்தி செய்ய முடியும் என்பதாகும்.

( 4 )

**37.** பின்வரும் அட்டவணை X, Y ஆகிய நாடுகள் அரிசி, கோப்பி ஆகியவற்றின் உற்பத்தியில் தம்மிடமுள்ள எல்லா வளங்களையும் பயன்படுத்தும் போது அவற்றில் ஒவ்வொன்றையும் உற்பத்தி செய்யக்கூடிய ஆற்றலைக் காட்டுகிறது.

| நாடு | அரிசி வெளியீட்டின் உச்ச அளவு (அலகுகள்) | கோப்பி வெளியீட்டின் உச்ச அளவு (அலகுகள்) |
|---|---|---|
| X | 5 000 | 5 000 |
| Y | 10 000 | 5 000 |

இரு நாடுகள் தொடர்பிலும் செலவு நன்மையினைக் குறிக்கும் சரியான கூற்று யாது?
(1) X நாடு அரிசி உற்பத்தியில் ஒப்பீட்டு நன்மையைக் கொண்டுள்ளது.
(2) X நாடு கோப்பி உற்பத்தியில் ஒப்பீட்டு நன்மையைக் கொண்டுள்ளது.
(3) X நாடு கோப்பி உற்பத்தியில் முழு நன்மையைக் கொண்டுள்ளது.
(4) Y நாடு கோப்பி உற்பத்தியில் முழு நன்மையைக் கொண்டுள்ளது.
(5) Y நாடு கோப்பி உற்பத்தியில் ஒப்பீட்டு நன்மையைக் கொண்டுள்ளது. ( 2 )

**38.** ஒரு நாட்டின் பண்ட வர்த்தக மாற்று வீதத்தைக் கணிப்பிடப் பயன்படுத்தப்படும் சூத்திரம் யாது?
(1) (ஏற்றுமதி விலைச்சுட்டெண் – இறக்குமதி விலைச்சுட்டெண்) × 100
(2) (இறக்குமதி விலைச்சுட்டெண் – ஏற்றுமதி விலைச்சுட்டெண்) × 100
(3) $\frac{\text{ஏற்றுமதி விலைச்சுட்டெண்}}{\text{இறக்குமதி விலைச்சுட்டெண்}} \times 100$
(4) $\frac{\text{இறக்குமதி விலைச்சுட்டெண்}}{\text{ஏற்றுமதி விலைச்சுட்டெண்}} \times 100$
(5) $\frac{\text{ஏற்றுமதிப் பருமன் சுட்டெண்}}{\text{இறக்குமதி விலைச் சுட்டெண்}} \times 100$ ( 3 )

**39.** பின்வருவனவற்றுள் ஒரு நாட்டின் சென்மதி நிலுவையின் நடைமுறைக் கணக்கில் **உள்ளடக்கப்படாத** விடயம் எது?
(1) கற்புலனாகா ஏற்றுமதிகள்
(2) வெளிநாட்டுக் கடன்கள் மீதான வட்டிச் செலுத்தல்கள்
(3) வெளிநாட்டு முதலீடுகளிலிருந்து பெறப்பட்ட இலாபங்கள்
(4) வெளிநாட்டு முறிகளைக் கொள்வனவு செய்தல்
(5) ஐக்கிய நாடுகள் சபையினால் வழங்கப்பட்ட உணவு உதவி ( 4 )

**40.** பின்வரும் எந்நிலைமையின் கீழ் ஒரு நாடு சர்வதேச நாணய நிதியத்திடமிருந்து (IMF) உதவிகளைக் கோரலாம்?
(1) வர்த்தக முரண்பாடு
(2) சென்மதி நிலுவைப் பிரச்சினை
(3) வெளிநாட்டு முதலீட்டு முரண்பாடு
(4) உட்கட்டுமான நிதிப் பற்றாக்குறை
(5) பொருளாதாரப் பின்னடைவு ( 2 )

**41.** பின்வரும் எச்சந்தர்ப்பங்களின் கீழ் நாணயமொன்றின் பெறுமதி இறக்கம், சென்மதி நிலுவையின் நடைமுறைக் கணக்குப் பற்றாக்குறையினைக் குறைவடையச் செய்யும்?

| | ஏற்றுமதிகளின் விலைக்கேள்வி நெகிழ்ச்சி | இறக்குமதிகளின் விலைக்கேள்வி நெகிழ்ச்சி |
|---|---|---|
| (1) | 0.6 | 0.1 |
| (2) | 0.1 | 0.4 |
| (3) | 0.5 | 0.5 |
| (4) | 0.7 | 0.2 |
| (5) | 0.8 | 1.6 |

( 5 )

**42.** தற்போது சிறப்பு எடுப்பனவு உரிமையின் (SDR) அலகொன்றின் பெறுமதி ஐந்து பிரதான நாணயங்களின் நிறையிடப்பட்ட பெறுமதியினை உள்ளடக்குகிறது. அவையாவன,
(1) ஐக்கிய அமெரிக்க டொலர், பிரித்தானிய பவுண், ஜப்பானின் யென், யூரோ, சுவிஸ் பிராங்
(2) ஐக்கிய அமெரிக்க டொலர், சுவிஸ் பிராங், சீனாவின் யுவான், யூரோ, அவுஸ்திரேலிய டொலர்
(3) ஐக்கிய அமெரிக்க டொலர், கனேடிய டொலர், ரஷ்யாவின் ரூபிள், யூரோ, சீனாவின் யுவான்
(4) ஐக்கிய அமெரிக்க டொலர், பிரித்தானிய பவுண், ஜப்பானின் யென், அவுஸ்திரேலிய டொலர், யூரோ
(5) ஐக்கிய அமெரிக்க டொலர், பிரித்தானிய பவுண், ஜப்பானின் யென், யூரோ, சீனாவின் யுவான் ( 5 )

**43.** 2030 பேண்தகு அபிவிருத்தி நிகழ்ச்சிநிரலின்படி எல்லா நாடுகளாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ள பேண்தகு அபிவிருத்திக் குறிக்கோள்கள் எத்தனை?
(1) 8 (2) 11 (3) 14 (4) 17 (5) 19 ( 4 )

**44.** 2016 இன் வீட்டுத்துறை வருமானம் மற்றும் செலவீட்டு ஆய்வு முடிவுகளின்படி இலங்கையின், நகர்ப்புற, கிராமியத் துறைகளுக்கான தலைக்குரிய வறுமைக் குறிகாட்டிகள் முறையே,
(1) 4.1%, 8.8% ஆகும். (2) 2.0%, 4.0% ஆகும். (3) 1.9%, 4.3% ஆகும்.
(4) 1.7%, 3.3% ஆகும். (5) 0.9%, 3.4% ஆகும்.
( 3 )

**45.** மனித அபிவிருத்திச் சுட்டெண்ணின் கூறுகளில் ஒன்று,
(1) கீழ் உழைப்பில் உள்ள சனத்தொகையின் சதவீதம்
(2) நாளாந்த சராசரி புரத உட்கொள்ளல்
(3) பிறப்பின் போது ஆயுள் எதிர்பார்க்கை
(4) சனத்தொகையில் 1 000 பேருக்கான வைத்தியர்களின் எண்ணிக்கை
(5) வளர்ந்தோர் எழுத்தறிவு வீதம்
( 3 )

**46.** பொருளாதார அபிவிருத்தி என்பது குறித்து நிற்பது,
(1) பொருளாதார வளர்ச்சியையாகும்.
(2) பொருளாதார வளர்ச்சியுடன் வெளியீட்டின் பங்கீட்டிலும் பொருளாதாரக் கட்டமைப்பிலும் ஏற்படும் மாற்றங்களையாகும்.
(3) நகர்ப்புற சனத்தொகையின் வாழ்க்கைத்தரத்தில் ஏற்படும் முன்னேற்றத்தையாகும்.
(4) மொத்த தேசிய வருமானத்தில் ஏற்படும் பேண்தகு அதிகரிப்பையாகும்.
(5) சனத்தொகையினர் மத்தியில் வருமான சமமின்மையை நீக்குவதையாகும்.
( 2 )

**47.** பின்வருவனவற்றுள் எந்த பொருளாதாரப் பிரச்சினையை அளவிடுவதற்கு லோரன்ஸ் வளையி பயன்படுத்தப்படலாம்?
(1) சந்தைகளின் வள ஒதுக்கீட்டு, உற்பத்தி வினைத்திறன்
(2) வர்த்தகப் பங்காளிகளின் ஒப்பீட்டு நன்மையும் வர்த்தகமாற்று விகிதமும்
(3) நாடுகளின் வளர்ச்சியும் சிறக்குமியல்பின் மட்டமும்
(4) சந்தை விலைகளின் சமநிலை
(5) வருமானப் பங்கீட்டில் நிலவும் சமமற்ற தன்மையின் மட்டம்
( 5 )

**48.** பின்வரும் அட்டவணை கருதுகோள்ரீதியான பொருளாதாரமொன்று தொடர்பிலான தொழில் வாய்ப்புத் தரவுகளைக் காட்டுகிறது.

| வருடம் | சனத்தொகை (மில்லியன்) | தொழில் புரியும் வயது சனத்தொகை (மில்லியன்) | தொழிலில் ஈடுபட்டுள்ளோர் எண்ணிக்கை (மில்லியன்) | தொழிலற்றிருப்போர் எண்ணிக்கை (மில்லியன்) |
|---|---|---|---|---|
| 1 | 50 | 25 | 12 | 3 |
| 2 | 60 | 32 | 14 | 2 |
| 3 | 70 | 40 | 20 | 5 |
| 4 | 80 | 45 | 24 | 6 |
| 5 | 90 | 50 | 26 | 4 |

எந்த வருடத்தில் தொழிலின்மை வீதம் 20% ஆகவும் தொழிற்படையின் பங்குகொள்ளல் வீதம் 60% ஆகவும் இருக்கும்?
(1) வருடம் 1 (2) வருடம் 2 (3) வருடம் 3 (4) வருடம் 4 (5) வருடம் 5
( 1 )

**49.** 1960 - 1977 காலப்பகுதியில் இலங்கையில் நடைமுறைப்படுத்தப்பட்ட பொருளாதார அபிவிருத்திக் கொள்கையை எவ்வாறு அழைக்கலாம்?
(1) வெளிநோக்கிய ஏற்றுமதி ஊக்குவிப்புக் கொள்கை
(2) உள்நோக்கிய இறக்குமதிப் பதிலீட்டுக் கொள்கை
(3) பின் தாராண்மைவாத பொருளாதாரக் கொள்கை
(4) திறந்த பொருளாதாரக் கொள்கை
(5) சந்தையை மையப்படுத்திய அபிவிருத்திக் கொள்கை
( 2 )

**50.** அண்மைய ஆண்டுகளில் இலங்கையின் அந்நியச் செலாவணி வருவாயில் அதிகளவு பங்களிப்புச் செய்துள்ள மூன்று துறைகளாவன,
(1) தேயிலை, புடைவைகளும் தைக்கப்பட்ட ஆடைகளும், சுற்றுலாத்துறை
(2) வெளிநாட்டு தொழிலாளர் பண அனுப்பல்கள், புடைவைகளும் தைக்கப்பட்ட ஆடைகளும், பெற்றோலிய உற்பத்திகள்
(3) வெளிநாட்டு தொழிலாளர் பண அனுப்பல்கள், புடைவைகளும் தைக்கப்பட்ட ஆடைகளும், இறப்பர் உற்பத்திகள்
(4) தேயிலை, புடைவைகளும் தைக்கப்பட்ட ஆடைகளும், பெற்றோலிய உற்பத்திகள்
(5) வெளிநாட்டு தொழிலாளர் பண அனுப்பல்கள், புடைவைகளும் தைக்கப்பட்ட ஆடைகளும், சுற்றுலாத்துறை
( 5 )

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

අ.පො.ස. (උ.පෙළ) විභාගය/ க.பொ.த. (உயர் தர)ப் பரீட்சை - 2019

නව නිර්දේශය/ புதிய பாடத்திட்டம்

විෂය අංකය / பாட இலக்கம்: **21**

විෂයය / பாடம்: **பொருளியல்**

## ලකුණු දීමේ පටිපාටිය/புள்ளி வழங்கும் திட்டம்

[ පත්‍රය/பத்திரம் I ]

| ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 01. | 2 | 11. | 3 | 21. | 5 | 31. | 3 | 41. | 5 |
| 02. | 4 | 12. | 2 | 22. | 2 | 32. | 3 | 42. | 5 |
| 03. | 3 | 13. | 2 | 23. | 3 | 33. | 1 | 43. | 4 |
| 04. | 2 | 14. | 4 | 24. | 5 | 34. | 2 | 44. | 3 |
| 05. | 4 | 15. | 2 | 25. | 2 | 35. | 1 | 45. | 3 |
| 06. | 1 | 16. | 4 | 26. | 4 | 36. | 4 | 46. | 2 |
| 07. | 1 | 17. | 5 | 27. | 3 | 37. | 2 | 47. | 5 |
| 08. | 4 | 18. | 4 | 28. | 3 | 38. | 3 | 48. | 1 |
| 09. | 3 | 19. | 3 | 29. | 4 | 39. | 4 | 49. | 2 |
| 10. | 1 | 20. | 5 | 30. | 3 | 40. | 2 | 50. | 5 |

✪ විශේෂ උපදෙස්/ விசேட அறிவுறுத்தல் :

එක් පිළිතුරකට/ ஒரு சரியான விடைக்கு 02 ලකුණු බැගින්/புள்ளி வீதம்

මුළු ලකුණු/மொத்தப் புள்ளிகள் $2 \times 50 = 100$

NEW
ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

ආර්ථික විද්‍යාව II
பொருளியல் II
Economics II

21 T II

06.08.2019 / 1300 – 1610

පැය තුනයි
**மூன்று மணித்தியாலம்**
*Three hours*

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
**மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்**
Additional Reading Time - 10 minutes

**வினாப்பத்திரத்தை வாசித்து வினாக்களைத் தெரிவு செய்வதற்கும் விடை எழுதும்பொழுது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.**

**அறிவுறுத்தல்கள் :**

※ உப பிரிவுகள் **'அ', 'ஆ'** ஆகிய ஒவ்வொன்றிலும் இருந்து குறைந்தபட்சம் **இரண்டு** வினாக்களையேனும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.

※ வரைபுத்தாள்கள் வழங்கப்படும்.

**உப பிரிவு 'அ'**

(இப் பிரிவிலிருந்து குறைந்தபட்சம் **இரண்டு** வினாக்களைத் தெரிவுசெய்க.)

**1.** (i) 'பொருளாதார வளங்கள்' என்பதனை வரைவிலக்கணப்படுத்தி, அவற்றை வகைப்படுத்திக் காட்டுக. (04 புள்ளிகள்)

(ii) அருமையானது ஏன் விட்டுக்கொடுப்புகளுக்கு இட்டுச்செல்கிறது என விளக்குக. (04 புள்ளிகள்)

(iii) உற்பத்தி இயல்தகவு வளையிகளின் மூலம், பின்வரும் எண்ணக்கருக்கள் எவ்வாறு வெளிப்படுத்தப்படுகின்றன?
(a) அருமைப் பிரச்சினை (b) அமையச் செலவு
(c) பொருளாதாரப் பின்னடைவு (d) பொருளாதார வளர்ச்சி (04 புள்ளிகள்)

(iv) ஓர் உற்பத்தி இயல்தகவு வளையியின் மீது அமைந்துள்ள எல்லாப் பொருள் சேர்க்கைகளும் உற்பத்தி வினைத்திறனை எய்துமாயினும், அவற்றில் ஒரு சேர்க்கை மாத்திரமே ஒதுக்கீட்டு வினைத்திறனை எய்துவது ஏன் என விளக்குக. (04 புள்ளிகள்)

(v) வள ஒதுக்கீடு தொடர்பாக எழும் பிரச்சினையைத் தீர்ப்பதில் சந்தைப் பொருளாதார முறைமை, கட்டளைப் பொருளாதார முறைமையிலிருந்து எவ்வாறு வேறுபடுகிறது? (04 புள்ளிகள்)

1. (i) - சமூகத்தின் அளவற்ற விருப்பங்களுடன் ஒப்பிடுகையில் வரையறுக்கப்பட்ட நிரம்பலைக் கொண்டுள்ள உற்பத்தி வளங்கள் பொருளாதார வளங்கள் எனப்படும்.

**(01 புள்ளி)**

- பொருளாதாரவளங்களின் அமையச் செலவு நேர்க்கணியமாகும். அவற்றைக் குறித்த ஒரு நோக்கத்திற்காகப் பயன்படுத்துவது என்பது வேறொரு நோக்கத்திற்காக அவற்றைப் பயன்படுத்துவதை விட்டுக் கொடுக்கப்பட வேண்டும் என்பதைக் கருதும்.

**(01 புள்ளி)**

- பொருளியலாளர்கள் பொருளாதார வளங்களை நால்வகைப் படுத்துகின்றனர்:
  - நிலம்
  - உழைப்பு
  - மூலதனம்
  - முயற்சி.

**(ஒவ்வொன்றிற்கும் 0.5 புள்ளிகள் வீதம் மொத்தம் 02 புள்ளிகள்)**

**[பொருளாதார வளங்களை வகைப்படுத்தும் மாற்றீடான விடை]**

- சொத்து வளங்கள் இயற்கை வளங்கள் மற்றும் மூலதனம் **(01 புள்ளி)**
- மனித வளம்: உழைப்பும் முயற்சியாண்மையும் **(01 புள்ளி)**

(ii) - அருமை என்பது ஒரு அடிப்படைப் பொருளாதாரப் பிரச்சினையாகும். மனிதர்களின் அளவற்ற விருப்பங்களைப் பூர்த்தி செய்யும் பொருட்டு கிடைக்கத் கூடியதாக உள்ள வளங்கள் வரையறுக்கப்பட்டதாக இருப்பதனால் இப்பிரச்சினை எழுகிறது. அத்துடன் இவ்வளங்கள் மாற்றுப்பயன்பாடு உடையனவாகும்.

**(01 புள்ளி)**

- பொருள்களும் சேவைகளும் அருமையாக உள்ளன என்பதன் கருத்து தனிநபர்களும் சமூகமும் தாம் விரும்பும் எல்லாவற்றையும் பெற முடியாது என்பதாகும். இந்த அருமைப் பிரச்சினையின் காரணமாக அருமையான வளங்களை வினைத்திறனுள்ள வகையில் ஒதுக்கீடு செய்ய சில தீர்மானங்களை எடுக்க வேண்டியுள்ளது. இதன் காரணமாக மாற்றீடுகள் மத்தியில் தெரிவினை மேற்கொள்ள வேண்டிய தேவை உள்ளது

**(01 புள்ளி)**

- சமூகம் அல்லது தனிநபர்கள் தெரிவை மேற்கொள்ளும் போது கிடைக்கத்தக்கதாக உள்ள மாற்றீடுகளிலிருந்து ஒன்றைத் தெரிவு செய்கின்றனர். அவர்கள் எதனைத் தெரிவு செய்த போதிலும் அதற்குத் பதிலாக வேறொன்றையும் தெரிவு செய்திருக்க முடியும். எனவே ஒன்றைப் பெற்றுக் கொள்ளும் பொருட்டு மற்றொன்றை தியாகஞ் செய்ய நேரிடுகிறது. உமது தெரிவை ஒரு விட்டுக் கொடுப்பாகக் கருத முடியும். விட்டுக் கொடுப்பு என்பது ஒன்றைப் பெறுவதற்காக மற்றொன்றை விட்டுவிடுவதைக் கருதும். மாற்றீடுகள் மத்தியில் தெரிவு செய்யும் போது விட்டுக் கொடுப்பு என்பது தவிர்க்க முடியாததாகும்.

**(02 புள்ளிகள்)**

-

(iii) (a)




(01 புள்ளி)

(b)




(01 புள்ளி)

(c)




(01 புள்ளி)

(d)




(01 புள்ளி)

(iv) - PPC யின் மீதுள்ள எல்லாப் புள்ளிகளும் நிறைதொழில் மட்டத்தையும் முழு உற்பத்தியையும் பிரதிநிதித்துவப் படுத்துகின்றன. PPC யின் மீது பொருள்கள் மிகக்குறைந்த செலவுடைய வளச்சேர்க்கையைப் பயன்படுத்தி உற்பத்தி செய்யப்படுகின்றன. (உள்ளீட்டு அலகொன்றிற்கு உச்ச வெளியீடு அல்லது வெளியீட்டு அலகொன்றிற்கு மிகக்குறைந்த உள்ளீட்டு அளவு). எனவே PPC யின் மீது ஏதேனும் ஒரு பொருளின் அதிக அளவினை மற்றைய பொருளின் உற்பத்தியை விட்டுக் கொடுக்காமல் உற்பத்தி செய்ய முடியாது. இப்பண்பு உற்பத்தி வினைத்திறன் எனப்படுகிறது.

(02 புள்ளி)

- எவ்வாறாயினும் உற்பத்தி வினைத்திறனை எய்துவது வள ஒதுக்கீட்டு வினைத்திறன் அடையப்பெறுவதை உறுதிப்படுத்தாது. சமூகத்தினால் மிகவும் விரும்பப்படும் பொருள்களை உற்பத்தி செய்ய வளங்கள் ஒருக்கீடு செய்யப்படும் போதே ஒதுக்கீட்டு வினைத்திறன் ஏற்படும். உதாரணமாக உற்பத்தி வினைத்திறனுள்ள ஒரு பொருள் சேர்க்கையானது சமூகத்தினால் மிகவும் விரும்பப்படும் ஒன்றாக இல்லாதிருக்கலாம். எனவே உற்பத்தி செய்யப்படும் ஒவ்வொரு பொருளினதும் எல்லைச் செலவானது அப்பொருளை வாங்கி நுகர்வதன் மூலம் நுகர்வோர் எய்தும் எல்லை நன்மைக்கு சமப்படும் போது ஒதுக்கீட்டு வினைத்திறன் எய்தப்படும்.

(02 புள்ளி)

(v) - சந்தைப் பொருளாதாரம் ஒன்றில் வள ஒதுக்கீடு பற்றிய தீர்மானங்கள் மத்தியிலிருந்து வரும் நெறிப்படுத்தல்கள் எதுவுமின்றி மேற்கொள்ளப்படும். எவ்வாறாயினும் அத்தீர்மானங்கள் ஒருங்கிணைக்கப்பட்டிருக்கும். பிரதான ஒருங்கிணைக்கும் கருவியாக சந்தைகளால் நிர்ணயிக்கப்பட்ட விலைகள் காணப்படும்.

- வளங்களை ஒதுக்கீடு செய்ய சந்தைப் பொருளாதாரத்திற்கு திட்டமிடும் அதிகாரமோ நிருவாகிகள் குழாமோ தேவையில்லை. தமது சுய நன்மையின் பொருட்டு செயற்படும் உற்பத்தியாளரினதும் நுகர்வோரினதும் மில்லியன் கணக்கிலான தீர்மானங்களின் காரணமாக விலைப் பொறிமுறையானது இயங்குகிறது.

- சந்தைப் பொருளாதாரம் ஒன்றில் வள ஒதுக்கீடு பற்றிய முழுச் செயன்முறைக்கும் அடிப்படையாக அமைவது விலைகளின் வகிபாகமாகும். வள ஒதுக்கீட்டுத் தீர்மானங்களை மேற்கொள்ள உதவும் சமிக்ஞைகளை வழங்கும் முக்கிய பணியினை விலைகள் ஆற்றுகின்றன.

- கட்டளைப்பொருளாதாரங்களில் வளஒதுக்கீடு பற்றிய தீர்மானங்கள் மத்திய அதிகார சபையினால் மேற்கொள்ளப்படுகின்றன. எதனை உற்பத்தி செய்வது எவ்வாறு உற்பத்தி செய்வது எவர் உற்பத்தியை பெற்றுக்கொள்வது பற்றிய அவசியமான சகல தீர்மானங்களையும் மத்திய அதிகார சபையே மேற்கொள்ளும். அத்தகைய பொருளாதாரங்கள் நடுவண்மயப்படுத்தப்பட்ட தீர்மானமெடுத்தலைப் பண்பாகக் கொண்டிருக்கும்.

- நடுவண்மயப்படுத்தப்பட்ட தீர்மானமெடுத்தல் மூலம் அடிப்படைப் பொருளாதாரப் பிரச்சினைகளுக்குத் தீர்வுகாண பொருளாதாரத்திற்கு விரிவான திட்டமொன்று தேவையாகும்.உற்பத்திக்கான தொழினுட்ப சாத்தியங்களின் முழுமையான வீச்சு மற்றும் எல்லா உற்பத்திக் காரணிகளின் நிரம்பல் பற்றிய முழுமையான விபரங்களும் திட்டமிடலாளர்களுக்குத் தெரிய வேண்டும். இத்தகவல்களின் அடிப்படையில் திட்டமிடலாளர்கள் உற்பத்தி செய்யப்படவேண்டிய பொருள்கள் சேவைகள் மற்றும் அவற்றை உற்பத்தி செய்யும் முறை பற்றிய தமது தெரிவுகளைத் தீர்மானிப்பர்

- பண்டங்களை ஒதுக்கீடு செய்யும் திட்டமிடலானது அரசாணையின் மூலம் மேற்கொள்ளப்படும். உதாரணமாக பங்கீட்டுத் திட்டத்தின் மூலம். ஏவ்வாறாயினும் திட்டமிடலாளர்கள் பங்கீட்டுக்காக விலைகளைப் பயன்படுத்துகின்றனர். அவர்கள் நகர்வுப் பொருள்களின் விலைகளை நிர்ணயித்து அக் கட்டுப்பாட்டு விலைகளில் நுகர்வோர் தாம் விரும்பும் அளவினைக் கொள்வனவு செய்ய விடுகின்றனர்.

( ஏதாவது நான்கு விடயத்துக்கு 04 புள்ளி)

**2.** (i) (a) ஒரு சாதாரண பொருளின் சந்தைக் கேள்வியில் செல்வாக்குச் செலுத்தும் காரணிகள் எவை? (02 புள்ளிகள்)

(b) ஒரு சாதாரண பொருளின் விலை **வீழ்ச்சியானது** அப்பொருளின் கேள்வியை ஏன் **அதிகரிப்பதில்லை** என விளக்குக. (02 புள்ளிகள்)

(ii) ஒரு பொருளின் விலை அதிகரிக்கும்போது அப்பொருளின் கேள்வித் தொகை வீழ்ச்சியடைவது ஏன் என விளக்குக. (04 புள்ளிகள்)

(iii) குறித்த ஒரு பண்டத்தின் சந்தைக் கேள்வி, நிரம்பல் சமன்பாடுகள் கீழே தரப்பட்டுள்ளன.

கேள்விச் சமன்பாடு : $Q_D = 60 - 3P$ நிரம்பல் சமன்பாடு : $Q_S = -10 + 2P$

சந்தைச் சமநிலையின்போது பொருளாதார மிகையினைக் கணிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iv) விலைசார் நிரம்பல் நெகிழ்ச்சியினைத் தீர்மானிக்கும் காரணிகளைச் சுருக்கமாக விபரிக்குக. (04 புள்ளிகள்)

(v) குறித்தவொரு நுகர்வோனின் சராசரி மாதாந்த வருமானம் ரூபா 35 000 இலிருந்து ரூபா 45 000 ஆக அதிகரிப்பதாகவும், அம் மாதத்தில் நுகர்வோனால் நுகரப்பட்ட பாணின் தொகை 30 இலிருந்து 20 ஆக வீழ்ச்சியடைவதாகவும் கருதுக. இந்த நுகர்வோனின் பாணுக்கான வருமானக் கேள்வி நெகிழ்ச்சி யாது? இந்நிலைமையின்கீழ் பாண் ஒரு சாதாரண பொருளா அல்லது இழிவுப் பொருளா? (04 புள்ளிகள்)

2. (a) - குறித்த பொருளின் விலை

- நுகர்வோரின் பண வருமானம்
- தொடர்புடைய பொருள்களின் விலைகள்
- நுகர்வோரின் எதிர்பார்க்கைகள்
- நுகர்வோரின் சுவை
- சந்தையில் நுகர்வோரின் எண்ணிக்கை
- ஏனைய காரணிகள்: சமூகவியல் குடித்தொகை சார் இயற்கையின் செயற்பாடுகள் : அரசாங்க நடவடிக்கைகள் விளம்பரம்.

**(எவையேனும் இருகாரணிகளுக்கு 02 புள்ளிகள்)**

(b) ஒரு பண்டத்தின் விலையில் ஏற்படும் வீழ்ச்சியானது அதன் கேள்வி மாற்றத்தைப் பாதிப்பதில்லை. எவ்வாறாயினும் பண்டத்தின் விலையில் ஏற்படும் மாற்றம் அப்பொருளின் கேள்வித் தொகையில் மட்டும் பாதிப்பை ஏற்படுத்தும்

**(02 புள்ளிகள்)**

(ii) - பண்டத்தின் விலைக்கும் அதன் கேள்வித் தொகைக்கும் இடையில் எதிர்க்கணியத் தொடர்பு காணப்படுகிறது. இத்தொடர்பு கேள்வி விதி எனப்படுகிறது.

- ஒரு பொருளின் விலை அதிகரிக்கும் போது நுகர்வோர் அப்பொருளின் குறைந்த அளவுக்குக் கேள்வி எழுப்பக் காரணங்கள் இரண்டாகும் (அ) பதிலீட்டு விளைவு மற்றும் (ஆ) வருமானவிளைவு.
- பதிலீட்டு விளைவு: பொருளின் விலை அதிகரிக்கும் போது ஏனையன மாறா நிலையில் அதன் சார்பு விலை அதிகரிக்கும். மக்கள் சார்பு ரீதியில் விலை கூடிய பொருளை குறைந்தளவில் கொள்வனவு செய்வதுடன் சார்பு ரீதியில் விலை மலிவான அதன் பதிலீட்டுப் பொருளை அதிகளவில் கொள்வனவு செய்வர்.

(02 புள்ளிகள்)

- வருமான விளைவு: பொருளின் விலை அதிகரிக்கும் போது ஏனையன மாறா நிலையில் நுகர்வோரின் மெய்வருமானம் (பணவருமானத்தின் கொள்வனவுச் சக்தி) வீழ்ச்சியடையும். அவர்கள் முன்பு கொள்வனவு செய்த எல்லாவற்றையும் தற்போது கொள்வனவு செய்ய இயலாது. இதனால் சாதாரண பொருள்களின் மீதான கேள்வித் தொகையினை அவர்கள் கட்டாயமாகக் குறைக்க வேண்டும்.

(02 புள்ளிகள் )

(iii) -




சந்தைச் சமநிலை விலை மற்றும் தொகை:

- 60 – 3P = - 10 + 2P
- 70 = 5P P = Rs. 14 Q = 18 **(02 புள்ளிகள்)**
- பொருளியல் மிகை = நுகர்வோர் மிகை + உற்பத்தியாளர் மிகை
- நுகர்வோர் மிகை = (6 x 18) ÷ 2 = 108 ÷ 2 = 54
- உற்பத்தியாளர் மிகை = (9 x 18) ÷ 2 = 162 ÷ 2 = 81
- சந்தைச் சமநிலையில் பொருளியல் மிகை = 54 + 81 = 135 **(02 புள்ளிகள்)**

**[பொருளியல் மிகைக் கணிப்பீட்டிற்கான மாற்றீடான விடை:]**

கேள்வி வளையியின் நிலைக்குத்தச்சு வெட்டுத்துண்டிற்கும் (= நிரம்பல் தொகை பூச்சியமாகும் விலை) நிரம்பல் வளையியின் நிலைக்குத்தச்சு வெட்டுத் துண்டிற்கும் (= நிரம்பல் தொகை பூச்சியமாகும் விலை) இடையிலான வித்தியாசம் x சமநிலைத் தொகை (= 18) ÷ 2 = பொருளியல் மிகை

- {(20 – 5) x 18 } ÷ 2 = 270 ÷ 2 = 135 **(02 புள்ளிகள்)**

(iv) - வளங்களைப் பதிலீடு செய்தற்கான சாத்தியங்கள் (காரணி அசைவு): ஒரு உற்பத்திக் காரணியை அதன் தற்போதைய உபயோகத்திலிருந்து இன்னொரு உபயோகத்திற்கு இலகுவாக மாற்றக்கூடிய தன்மை நிரம்பலைப் பாதிக்கும்

- நிரம்பல் தீர்மானத்தை எடுக்கும் காலகட்டம்: நிரம்பலுக்கான மூன்று காலகட்டங்கள் உள்ளன: (அ) சந்தைக் காலகட்டம், (ஆ) குறுங்காலம் (இ) நீண்டகாலம்.

சந்தைக் காலகட்டம் மிகக் குறுகியதாக இருப்பதனால் கேள்வியிலும் விலையிலும் ஏற்படும் ஒரு மாற்றத்திற்கு உடனடியாகப் பதிலளிக்க முடியாது. குறுங்காலத்தில்

உற்பத்தியாளர்கள் தமது பொறித்தொகுதிகளின் இயலளவை நிலையாக வைத்திருப்பதாகக் கருதப் படுகிறது. ஆனால் நிறுவனங்கள் தமது பொறித் தொகுதிகளை அதிக செறிவுடன் இயக்க கால இடைவெளி உள்ளது.
நீண்ட காலத்தில் நிறுவனங்கள் தமது விருப்பப்படி எல்லா வளச்சீராக்கங்களையும் மேற்கொள்ளப் போதிய கால இடைவெளி உள்ளது.

- பொருளின் வகை (களஞ்சியப் படுத்தல் சாத்தியங்கள்): நெடுவாழ்வுப் பொருள்கள் (இலகுவில் அழிவடையாப் பொருள்கள்) மற்றும் நெடுவாழ்வல்லாப் பொருள்கள் (இலகுவில் அழிவடையும் பொருள்கள்); இலகுவில் அழிவடையாப் பொருள்களின் நிரம்பல் நெகிழ்வற்றதாகவும் இலகுவில் அழிவடையாப் பொருள்களின் நிரம்பல் நெகிழ்வுள்ளதாகவும் காணப்படும்.

- கையிருப்புகளின் கிடைப்பனவு: உற்பத்தியாளரிடம் போதியளவு கையிருப்புகள் உள்ளபோது நிரம்பல் நெகிழ்வுள்ளதாகக் காணப்படும்.

- இயலளவின் நெகிழ்தன்மை (மேலதிக இயலளவு): மேலதிக இயலளவு உள்ளபோது நிரம்பல் நெகிழ்வுள்ளதாகக் காணப்படும்.

- உற்பத்திச் செயன்முறையில் பயன்படுத்தப்படும் உள்ளீடுகளின் வகை: சிலவகை பொருள்களும் சேவைகளும் அரிதான அல்லது விசேட தன்மை கொண்ட உள்ளீடுகளைப் பயன்படுத்தி உற்பத்தி செய்யப்பட முடியும். இத்தகைய பொருள்கள் சேவைகள் மிகக் குறைந்த நிரம்பல் நெகிழ்ச்சியை சிலவேளை பூச்சிய நிரம்பல் நெகிழ்ச்சியை கொண்டிருக்கக் கூடும். ஏனைய பொருள்களையும் சேவைகளையும் பொதுவாக கிடைக்கக் கூடியவளங்களை பயன்படுத்தி உற்பத்தி செய்யப்படலாம். அவை உயர்ந்த நிரம்பல் நெகிழ்ச்சியைக் கொண்டிருக்கலாம்.

**(02 விளக்கத்துடன் கூடிய விடை ஒவ்வொன்றுக்கும் 02 புள்ளிகள்; விளக்கம் தரப்படாத விடை ஒவ்வொன்றிற்கும் 01 புள்ளி; மொத்தம் 04 புள்ளிகள்)**

(v) - கேள்வியின் வருமான நெகிழ்ச்சி :

| வருமான மட்டம் | கேள்வித் தொகை |
|---|---|
| 35,000 | 30 |
| 45,000 | 20 |

**[வருமான மட்ட மாற்றம் பெரிதாக இருப்பதனால் புள்ளி நெகிழ்ச்சிக்குரிய சூத்திரத்தை பயன்படுத்தி நெகிழ்ச்சியை கணிப்பிடுவது பொருத்தமற்றது. நெகிழ்ச்சியைக் கணிப்பிட வில் நெகிழ்ச்சி சூத்திரத்தைப் பயன்படுத்துவது பொருத்தமானது.]**

(a) வருமான நெகிழ்ச்சி: $\eta = \frac{\text{தொகை மாற்றம்}}{\text{வருமான மாற்றம்}} \times \frac{\text{சராசரி வருமானம்}}{\text{சராசரித் தொகை}}$

**(01 புள்ளிகள்)**

$$\eta = \frac{-10}{10,000} \times \frac{(35,000+45,000)/2}{(30+20)/2} = \frac{-10}{10,000} \times \frac{40,000}{25}$$ **(01 புள்ளிகள்)**

$$\eta = -\frac{40}{25} = -\frac{8}{5} = -1.6$$ **(01 புள்ளிகள்)**

(புள்ளி நிகழ்ச்சி பயன்படுத்தி இருப்பின் 01 புள்ளி வழங்கலாம்)

(b) - பாண் ஒரு இழிவுப் பொருளாகும் ஏனெனில் அதன் வருமான நெகிழ்ச்சி எதிர்கணியமாகும் (அதாவது. – 1.6). **(01 புள்ளி)**

**3.** (i) நிரம்பல் மாற்றத்தில் செல்வாக்குச் செலுத்தும் **நான்கு** பிரதான காரணிகளைக் குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(ii) சந்தையில் விவசாய விளைபயிர்கள் போன்ற முதன்நிலை உற்பத்திகளின் விலைகள் பெரும்பாலும் உறுதியற்ற தன்மையினைக் கொண்டிருப்பது ஏன் என விளக்குக. (04 புள்ளிகள்)

(iii) விவசாயப் பண்டங்களின் விலைகளை உறுதிப்படுத்துவதற்காக அரசாங்கத்தினால் மேற்கொள்ளப்படத்தக்க நடவடிக்கைகள் யாவை? (04 புள்ளிகள்)

(iv) குறித்தவொரு பொருளின் சந்தைக் கேள்வி, நிரம்பல் வளையிகளுக்குரிய சமன்பாடுகள் கீழே தரப்பட்டுள்ளன.

கேள்விச் சமன்பாடு : $Q_D = 200 - 2P$ நிரம்பல் சமன்பாடு : $Q_S = -100 + 4P$

(a) இப் பொருளின் உற்பத்தி மீது அரசாங்கம் ரூபா 6 அலகு வரியொன்றை விதிப்பதாகக் கருதுக. வரியின் பின்னர் பொருளுக்காக கொள்வனவாளர் செலுத்தும் விலை யாது? (04 புள்ளிகள்)

(b) இவ்வரியின் மூலம் அரசாங்கம் எந்தளவு வரி வருவாயைச் சேகரித்துக் கொள்ளும்? (04 புள்ளிகள்)

3. (i)
- உள்ளீடுகளின் விலைமாற்றங்கள் (உற்பத்திச் செலவு)
- தொழில் நுட்ப மாற்றம்
- தொடர்புடைய பொருள்களின் விலைகளின் மாற்றங்கள் (அதே உள்ளீடுகளைப் பயன்படுத்தி உற்பத்தி செய்யப்படத்தக்க பொருள்கள்)
- அரசாங்கக் கொள்கைகளின் மாற்றங்கள்(வரிக்கொள்கைகள் மற்றும் நிர்வாகக் கட்டுப்பாடுகள்)
- நிரம்பலாளரின் எண்ணிக்கையில் மாற்றம்
- இயற்கை நிலைமைகளில் ஏற்படும் மாற்றம் (காலநிலைக் காரணிகள்)
- நிறுவனத்தின் இலக்குகளில் ஏற்படும் மாற்றங்கள்
- நிறுவனத்தின் எதிர்பார்க்கைகளில் ஏற்படும் மாற்றங்கள்

**(ஒவ்வொன்றிற்கும் 01 புள்ளி வீதம் நான்கு காரணிகளுக்கு மொத்தம் 04 புள்ளிகள்)**

(ii) - விவசாயப் பண்டங்களின் சந்தைகள் அடிக்கடி தீவிர விலைத்தளம்பல்களுக்கு உள்ளாகின்றன. விலைத்தளம்பல்கள் விவசாயச் சந்தைகளின் ஓர் அடிப்படைப் பண்பாகும். பெரும்பாலும் இதுவே விவசாயப் பொருள் வியாபாரத்தின் இடர் அபாயத்திற்கான பிரதான காரணியாகவும் உள்ளது. உற்பத்தி தொடர்பான பல தீர்மானங்கள் பொருள் விற்பனை இடம்பெற வெகு காலத்திற்கு முன்பே

மேற்கொள்ளப்படுவதால் முடிவுப் பொருள்கள் சந்தைக்கு வரும்பொழுது பெறக்கூடிய விலை தொடர்பில் ஒரு குறிப்பிட்டளவு நிச்சயமற்ற தன்மை நிலவுகிறது. அடிப்படைக் கேள்வி நிரம்பல் காரணங்களில் ஏற்படும் மாற்றங்களே இதற்கான பிரதான காரணங்களாகும்.

**(01 புள்ளி)**

நெகிழ்வற்ற கேள்வி: பெரும்பாலான முதல் விளைவுப் பொருள்களுக்கான கேள்வி சார்பளவில் நெகிழ்வற்றதாகும். தேயிலை விலை வீழ்ச்சியடைந்தால் அதன் கேள்வி மிகச்சிறிய அளவிலேயே அதிகரிக்கும். தேயிலைக்கு சில நெருங்கிய பதிலீடுகள் உள்ளமையும் நுகர்வோனின் வருமானத்தில் தேயிலை மீது செலவிடப்படும் சதவீதம் மிகவும் குறைவாக உள்ளமையும் இதற்குக் காரணமாகும். இதனால் விலையில் ஏற்படும் ஒரு மாற்றம் பொருளுக்கான கேள்வியில் பெரிய மாற்றங்களை ஏற்படுத்தாது. உணவு ஓர் அத்தியாவசியத் தேவையாகும். எனவே உணவுக்கான கேள்வி நெகிழ்வற்றதாகும்.

கேள்வியும் நிரம்பலும் நெகிழ்வற்றதாக இருப்பதனால் நிரம்பலில் ஏற்படும் ஒரு மாற்றம் விலையில் கணிசமானளவு மாற்றத்தை ஏற்படுத்தும்.நெகிழ்வற்ற கேள்வி

இருப்பதனால் கேள்வியில் ஏற்படும் ஒரு மாற்றம் விலையில் சார்பளவில் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தும். **(01 புள்ளி)**

- நெகிழ்வற்ற நிரம்பல்: குறுங்காலத்தில் தேயிலை இறப்பர் தெங்கு கருவா கோப்பி போன்றவற்றின் நிரம்பல் நெகிழ்வற்றது. விலை உயருமாயின் விவசாயிகளால் ஓரிரவில் நிரம்பலை அதிகரித்து விட முடியாது. விவசாய நிலங்களை ஒழுங்கு படுத்த பொறித்தொகுதிகளை அமைக்க சுமார் 3-5 வருடகாலம் தேவைப்படும். எனவே விலைமாற்றங்களுக்கு ஏற்ப உரிய வகையில் செயற்பட பாரிய காலதாமதம் ஏற்படும் **(01 புள்ளி)**
- இயற்கைக் காரணிகள்: கோப்பி தேயிலை தெங்கு உருளைக்கிழங்கு போன்ற விசாய விளைபொருள்களின் நிரம்பலானது உற்பத்தியாளர்களின் கட்டுப்பாட்டிற்கு அப்பாற்பட்ட சில காரணிகளால் (வானிலை நோய்த்தாக்கம்) மாறுபடலாம்.
உதாரணமாக ஒரு ஆரம்ப உறைபனி விவசாய விளைபொருள்களின் நிரம்பலைப் பாதிக்கலாம் (இது விலை அதிகரிப்புக்க இட்டுச்செல்லும்) விவசாய விளைபொருள்கள் தொடர்பில் இது ஒரு பிரச்சினையாகும். சிறந்த ஒரு வானிலை நிரம்பலில் எதிர்பாரா வகையில் பாரிய அதிகரிப்பை ஏற்படுத்தும். இதனால் சந்தையில் மிகைநிலை உருவாகி துரித விலைவீழ்ச்சிக்கு இட்டுச்செல்லும். அத்துடன் நோய்த்தாக்கங்கள் மற்றும் பீடைகள் நிரம்பலைப் பாதிக்கும். உருளைக்கிழங்குகள் இலைக் கருகல் நோயினால் பாதிக்கப்படின் அது விலையில் அதிகரிப்பை ஏற்படுத்தும் **(01 புள்ளி)**

- விவசாயப் பொருள்களின் உற்பத்திக்காலம் பொதுவாக நீண்டதாகும். அத்துடன் அவற்றுள் பெரும்பாலானவை இலகுவில் பழுதடையக்கூடியனவாகும். இதனால் தனிப்பட்ட விவசாயிகளால் பொருள் கையிருப்புக்களைப் பேண முடியாது. குறுங்காலத்தில் விவசாய விளைபொருள்களின் நிரம்பல் நெகிழ்வற்றதாகும். எனவே விலை அதிகரிக்கும் போது விவசாயிகளால் உடனடியாக நிரம்பலை அதிகரிக்க முடியாது **(01 புள்ளி)**

**(ஒவ்வொன்றிற்கும் 01 புள்ளி வீதம் நான்கு விளக்கங்களுக்கு மொத்தம் 04 புள்ளிகள்)**

(iii)
- உத்தரவாத விலைத்திட்டம்
- குறைநிரப்புக் கொடுப்பனவுத்திட்டம்
- குறைந்த பட்ச விலை
- உற்பத்தி அனுமதிப்பங்குகள்
- நிலத்தில் உற்பத்தி செய்யாமல் இருப்பதற் ஊக்கவிப்புக் கொடுப்பனவுகள்
- விலையை நிலைப்படுத்தும் இருப்புத்திட்டங்கள்
- ஏற்றுமதி மானியத்திட்டங்கள்
- சந்தைத் தகவல்கள்

**(ஒவ்வொன்றிற்கும் 01 புள்ளி வீதம் நான்கு விடைகளுக்கு மொத்தம் 04 புள்ளிகள்)**

(iv) (a) - வரியின் பின்னர் கொள்வனவாளர் விலை:

$Q_D = 200 - 2P_b$ $QS = -100 + 4P_s$

கொள்வனவாளர் விலை (Pb) = Ps + t விற்பனையாளர் விலை (Ps) = Pb – t **(01 புள்ளி)**

$200 - 2P_b = -100 + 4(P_b - 6)$ **(01 புள்ளி)**

$200 - 2P_b = -100 + 4P_b - 24$

$324 = 6P_b$

$54 = P_b$ **(02 புள்ளிகள்)**

(b) - வரியில் இருந்தான அரசாங்க வருவாய்:
வரிவருவாய் = ஒரு அலகிற்கான வரி **x** சமநிலைக் கேள்வித் தொகை **(01 புள்ளி)**
வரியின் பின்னர் கேள்வித் தொகை = 200 – 2 (54) = 200 – 108 = 92
**(01 புள்ளி)**

ஒரு அலகிற்கான வரி = Rs. 6
வரி வருவாய் = 92 x 6 = 552 **(02 புள்ளிகள்)**

**4.** (i) வெளிப்படையான (நேரடி) செலவுகளையும் உள்ளார்ந்த செலவுகளையும் வேறுபடுத்துக. பாடசாலைக்குச் செல்வதில் நீர் எதிர்கொண்ட சில வெளிப்படையான செலவுகளும் உள்ளார்ந்த செலவுகளும் எவை? (04 புள்ளிகள்)

(ii) உற்பத்திச் செயன்முறையில் ஒரு நிறுவனத்தின் குறுங்காலம், நீண்டகாலத்திலிருந்து எதன் காரணமாக வேறுபடும்? (04 புள்ளிகள்)

(iii) நிறைபோட்டியின் **நான்கு** அடிப்படை எடுகோள்களும் யாவை? (04 புள்ளிகள்)

(iv) பின்வரும் வரைபடம் குறுங்காலத்தில் இயங்கி 100 அலகு சமநிலை வெளியீட்டினை மேற்கொள்ளும் ஒரு நிறைபோட்டி நிறுவனத்தினைப் பிரதிநிதித்துவப்படுத்துகிறது.




சமநிலை மட்ட வெளியீட்டின்போது பின்வருவனவற்றைக் கணிப்பிடுக.

(a) நிறுவனம் பெற்றுக்கொள்ளும் மொத்த வருவாய் (02 புள்ளிகள்)
(b) நிறுவனம் எதிர்நோக்கும் மொத்தச் செலவு (02 புள்ளிகள்)
(c) நிறுவனத்தின் மொத்த நிலையான செலவு (02 புள்ளிகள்)
(d) நிறுவனத்தின் மொத்த பொருளாதார இலாபம் அல்லது நட்டம் (02 புள்ளிகள்)

4. (i) - நிறுவனத்திற்கு வெளியிலிருந்து பெறப்பட்டு பயன்படுத்தப்படும் வளங்களின் நேரடிச் செலவுகள் வெளிப்படையான செலவுகள் எனப்படும்.
**(01 புள்ளி)**

- நிறுவனத்தின் உரிமையாளர்களால் வழங்கப்பட்டு நிறுவனத்தால் பயன்படுத்தப்படும் வளங்களுக்காக அவற்றின் உரிமையாளர்களால் இழக்கப்பட்ட மிகச்சிறந்த வாய்ப்பின் பெறுமதி (அமையச் செலவுகள்) உள்ளார்ந்த செலவுகள் எனப்படும்.
**(01 புள்ளி)**

| **பாடசாலை செல்வதன் வெளிப்படையான செலவுகள்:** | **பாடசாலை செல்வதன் உள்ளார்ந்த செலவுகள்:** |
|---|---|
| - பாடசாலை உபகரணச் செலவுகள் | - காலத்தின் அமையச் செலவு |
| - பயணச் செலவுகள் | - இழக்கப்பட்ட வருமானங்கள் |
| - வசதிக்கட்டணச் செலவுகள் | - பொருளாதார நடவடிக்கையில் பெற்றோருக்கு உதவும் வாய்ப்பை இழத்தல் |

**(வெளிப்படையான செலவுகளுக்கு 01 புள்ளி உள்ளார்ந்த செலவுகளுக்கு 01 புள்ளி)**

(ii) - சில வளங்களின் உள்ளீட்டுத் தொகைகள் நிலையாக உள்ள ஒரு காலப்பகுதியே குறுங்காலமாகும்.
பெரும்பாலான நிறுவனங்களில் நிறுவனத்தின் தொழில் நுட்பம் கட்டடங்கள் மற்றும் கருவிகள் நிலையான வளங்களாகக் காணப்படும்.

- நீண்டகாலம் என்பது எல்லா வளங்களின் உள்ளீட்டு அளவுகளையும் மாற்றியமைக்கப்படக்கூடிய காலப்பகுதியாகும். இதன் போது எல்லா உள்ளீடுகளும் மாறும் உள்ளீடுகளாக இருக்கும்.

- குறுங்காலத்தில் நிறுவனம் நிலையான உள்ளீடுகளையும் மாறும் உள்ளீடுகளையும் பயன்படுத்தி உற்பத்தியில் ஈடுபடும்.

- குறுங்காலத்தில் உற்பத்தியானது குறைந்து செல்லும் விளைவு விதிக்கு உட்பட்டிருக்கும். நீண்ட காலத்தில் உற்பத்தியானது அளவுத்திட்ட விளைவு விதிக்கு உட்பட்டிருக்கும்.

**(ஒவ்வொன்றிற்கும் 01 புள்ளி வீதம் மொத்தம் 04 புள்ளிகள்)**

(iii)- ஓரினத்தன்மை வாய்ந்த பொருள்: தொழிலில் உள்ள ஒவ்வொரு நிறுவனமும் ஒரே பொருளையே உற்பத்தி செய்யும்.

- பெரும் எண்ணிக்கையிலான உற்பத்தியாளர்கள்: சுயாதீனமாக இயங்கும பெரும்எண்ணிக்கையிலான விற்பனையாளர்கள்.

- பூரணமான தகவல்கள்: விற்பனைக்கு வைக்கப்பட்டிருக்கும் பொருள்களின் தொகைகள் மற்றும் அவற்றின் விலைகள் பற்றி கொள்வனவாளர்கள் பூரணமாக அறிந்திருக்கும் போது பூரண தகவல் நிலவுவதாக நாம் கருதலாம்.

- உட்பிரவேசிப்பதற்கும் வெளியேறுவதற்குமான சுதந்திரம்: கைத்தொழிலில் பிரவேசிப்பதற்கு சட்டரீதியான அல்லது வேறு வகையிலான தடைகள் இல்லை..

**(ஒவ்வொன்றிற்கும் 01 புள்ளி வீதம் மொத்தம் 04 புள்ளிகள்)**

(iv) (a) சமநிலை வெளியீட்டு மட்டத்தில் நிறுவனத்தின் மொத்த வருவாய்:

ரூபா. 60 x 100 = Rs. 6000 **(02 புள்ளிகள்)**

(b) சமநிலை வெளியீட்டு மட்டத்தில் மொத்தச் செலவு:

ATC x Q = ரூபா. 40 x 100 = ரூபா. 4000 **(02 புள்ளிகள்)**

(c) மொத்த நிலையான செலவு: AFC (= ATC – AVC) x Q = (40 – 30) x 100 = ரூபா. 1000

**(02 புள்ளிகள்)**

(d) மொத்தப் பொருளியல் இலாபம் அல்லது நட்டம் = TR – TC = 6000 – 4000 = ரூபா. 2000 **(02 புள்ளிகள்)**

**(சமன்பாடு சரியாயின் 01 புள்ளி: விடை 01 புள்ளி)**

**5.** (i) அரசாங்க செலவீட்டில் உள்ளடக்கப்படும் பின்வரும் விடயங்களில் 'கூட்டுச் செலவுகள்' எவை?, 'தனிநபர் செலவுகள்' எவை?

(a) உர மானியம் (b) மருத்துவ ஆராய்ச்சி
(c) காவல்துறை மற்றும் தீயணைப்புப்படை (d) பாடசாலை மதிய உணவு (04 புள்ளிகள்)

(ii) கருதுகோள்ரீதியான பொருளாதாரம் ஒன்றின் பின்வரும் தரவுகள் உமக்குத் தரப்பட்டுள்ளன.

| விடயம் | பெறுமதி (பில்லியன் ரூபா) |
|---|---|
| ஊழியர் சம்பள வருமானம் | 2 500 |
| மொத்த தொழிற்பாட்டு மிகை | 6 000 |
| நிலையான மூலதன நுகர்வு | 700 |
| உற்பத்தி மீதான வேறுவரிகள் கழி - மானியம் | 50 |
| உற்பத்திப் பொருள்கள் மீதான வரிகள் | 1 200 |
| உற்பத்திப் பொருள்களுக்கான மானியங்கள் | 250 |
| ஏனைய உலக நாடுகளிலிருந்தான தேறிய முதனிலை வருமானங்கள் | – 400 |
| ஏனைய உலக நாடுகளிலிருந்தான தேறிய நடைமுறை மாற்றல்கள் | 1 000 |

மேலுள்ள தரவுகளின் அடிப்படையில் பின்வருவனவற்றைக் கணிப்பிடுக.

(a) அடிப்படை விலைகளில் மொத்த கூட்டப்பட்ட பெறுமதி (02 புள்ளிகள்)

(b) மொத்த உள்நாட்டு உற்பத்தி (02 புள்ளிகள்)

(c) தேறிய தேசிய வருமானம் (02 புள்ளிகள்)

(d) செலவிடத்தக்க மொத்தத் தேசிய வருமானம் (02 புள்ளிகள்)

(iii) 45° கோட்டு வரைபடமொன்றைப் பயன்படுத்தி பேரினப் பொருளாதாரச் சமநிலையைக் காட்டுக. உமது வரைபடத்தில் மொத்த செலவீட்டுச் சார்பு, தேசிய வருமான சமநிலை மட்டம் ஆகியவற்றைக் குறிப்பிடுக. (அச்சுக்கள் முறையாகப் பெயரிடப்படுவதில் கவனம் செலுத்துக.) (04 புள்ளிகள்)

(iv) கருதுகோள்ரீதியான பொருளாதாரமொன்றின் எல்லை நுகர்வு நாட்டம் 0.9 ஆகவும், செலவிடத்தக்க மொத்த தேசிய வருமானம் பூச்சியமாக உள்ளபோது மொத்த நுகர்வு மட்டம் 100 ஆகக் காணப்படுவதாகவும் கருதுக. அத்தோடு முதலீடு (I) = 200 ஆகவும், அரசாங்கக் கொள்வனவுகள் (G) = 45 ஆகவும், தேறிய ஏற்றுமதிகள் (NX) = 0 ஆகவும், வரிகள் (T) = 50 ஆகவும் உள்ளதாகக் கொள்க. (எல்லா தரவுகளும் பில்லியன் ரூபாவிலாகும்.)

(a) சமநிலை மட்ட மொத்த தேசிய வருமானத்தைக் (Y) காண்க. (02 புள்ளிகள்)

(b) அரசாங்கக் கொள்வனவுகள் (G), வரிகள் (T) ஆகியன ரூபா 10 பில்லியனால் ஏககாலத்தில் அதிகரிக்குமாயின், சமநிலை மட்ட தேசிய வருமானத்தின் மீது அதன் விளைவு எவ்வாறாக இருக்கும்? (02 புள்ளிகள்)

5. (i) (a) உர மானியம் - தனிப்பட்டது
(b) மருத்துவ ஆராய்ச்சி - கூட்டுச்செலவு
(c) பொலிஸ் மற்றும் தீயணைப்பு - கூட்டுச்செலவு
(d) பாடசாலை மதிய உணவு - தனிப்பட்டது

**(ஒவ்வொன்றிற்கும் 01 புள்ளி வீதம் மொத்தம் 04 புள்ளிகள்)**

(ii) (a) அடிப்படை விலைகளில் மொத்த கூட்டப்பட்ட பெறுமதி GVA:

| | |
|---|---|
| ஊழியர்களுக்கான சம்பளங்கள் | 2,500 |
| மொத்த தொழிற்படு மிகை | 6,000 |
| உற்பத்தி மீதான ஏனைய வரிகள் கழி மானியங்கள் | 50 |
| | -------- |

அடிப்படை விலைகளில் GVA Rs. 8,550 பில்லியன்

**(சரியாகப் பட்டியலிட 01 புள்ளி சரியான விடைக்கு 01 புள்ளி மொத்தம் 02 புள்ளிகள்)**

(b) மொத்த உள்நாட்டு உற்பத்தி GDP:

GDP = அடிப்படை விலைகளில் GVA + உற்பத்திகள் மீதான வரிகள் கழி மானியங்கள் (அல்லது உற்பத்தி பொருட்கள் மீதான தேறிய வரி ) **(01 புள்ளி)**

GDP = 8,550 + (1200 – 250) = Rs. 9, 500 பில்லியன் **(01 புள்ளி)**

(c) தேறிய தேசிய வருமானம் NNI:

NNI = (GDP - நிலையான மூலதன நுகர்வு) + வெளிநாடுகளிலிருந்தான தேறிய முதனிலை வருமானம் **(01 புள்ளி)**

NNI = (9,500 - 700 ) + (- 400) = Rs. 8, 400 பில்லியன் **(01 புள்ளி)**

(d) செலவிடத்தக்க மொத்த தேசிய வருமானம் GNDI:

GNDI = GDP + வெளிநாடுகளிலிருந்தான தேறிய முதனிலை வருமானம் + வெளிநாடுகளிலிருந்தான தேறிய மாற்றல்கள் **(01 புள்ளி)**

GNDI = 9500 + (-400) + 1000 = Rs. 10, 100 பில்லியன் **(01 புள்ளி)**

(iii)




**(வரைபடத்திற்கு 02 புள்ளிகள்; (சமநிலை வருமான மட்டத்திற்கு 02 புள்ளிகள்)**

(iv) (a) – சமநிலை மட்ட GDP:

GDP (Y) = C + I + G + (X – M)

$C = 100 + 0.9\ Y_D\ (= Y-T)$

Y = 100 + 0.9 (Y- 50) + 200 + 45 + 0 **(01 புள்ளி)**

Y = 100 + 0.9Y – 45 + 245

Y = 300 + 0.9Y

0.1Y = 300; Y = 3000 billion **(01 புள்ளி)**

(b) - அரசாங்கக் கொள்வனவுகளில் ஏற்படும் ருபா 10 பில்லியன் அதிகரிப்பானது மொத்த உள்நாட்டு உற்பத்தியின் மீது
$K_G$ x 10 $(= \frac{1}{1-b}.$ x 10 $= \frac{1}{1-0.9}$ x10 = 10 x 10 = 100 அளவான பெருக்கி விளைவினைக் கொண்டிருக்கும்

- வரிகளில் ஏற்படும் ருபா 10 பில்லியன் அதிகரிப்பானது தொத்த உள்நாட்டு உற்பத்தியின் மீது
$K_T$ x 10 $(= \frac{-b}{1-b}.$ x 10 $= \frac{-0.9}{1-0.9}$ x 10 = -9 x 10 = - 90 அளவான எதிர்க்கணிய பெருக்கி விளைவைக் கொண்டிருக்கும்

- எனவே அரசாங்கக் கொள்வனவுகளையும் வரிகளையும் ஏககாலத்தில் ருபா 10பில்லியனால் அதிகரிப்பதன் தேறிய விளைவாக மொத்த உள்நாட்டு உற்பத்தி ருபா 10 பில்லியனால் விரிவாக்கமடையும். ( $K_G$ x 10 = 100 அத்துடன் $K_T$ x 10 = - 90 ).

**(02 புள்ளிகள்)**

[**மாற்றீடான விடை:** அரசாங்க செலவீட்டிலும் வரிகளிலும் ஏற்படும் ருபா 10 பில்லியன் சம அளவு அதிகரிப்பானது சமநிலை மொத்த உள்நாட்டு உற்பத்தியை ருபா 10 பில்லியனால் அதிகரிக்கும். அதாவது G யும் T யும் தலா ருபா 10 பில்லியனால் அதிகரிக்கப்பட்டால் அது சமநிலைப் பாதீடாக அமைவதனால் பாதீட்டின் அளவினால் சமநிலை உள்நாட்டு வெளியீட்டு மட்டம் அதிகரிக்கும்.
சமநிலைப்பாதீட்டுப் பெருக்கியின் பெறுமதி 1 ஆகும்.]

**(02 புள்ளிகள்)**

### உப பிரிவு 'ஆ'

(இப் பிரிவிலிருந்து குறைந்தபட்சம் **இரண்டு** வினாக்களைத் தெரிவுசெய்க.)

**6.** (i) 'மொத்த உள்நாட்டு உற்பத்திச் சுருக்கி' என்றால் என்ன? மொத்த உள்நாட்டு உற்பத்திச் சுருக்கிக்கும் கொழும்பு நுகர்வோர் விலைச் சுட்டெண்ணுக்கும் இடையிலான பிரதான வேறுபாடுகள் யாவை? (04 புள்ளிகள்)

(ii) வரைபடமொன்றைப் பயன்படுத்தி பணவீக்க இடைவெளி என்னும் எண்ணக்கருவை விளக்குக. (04 புள்ளிகள்)

(iii) பரிமாற்ற நோக்கப் பணக் கேள்வியையும் உத்தேச நோக்கப் பணக் கேள்வியையும் வேறுபடுத்துக. (04 புள்ளிகள்)

(iv) வங்கி வாடிக்கையாளரொருவர் ரூபா 10 000 இனை தனது நடைமுறைக் கணக்கில் புதிதாக வைப்பில் இடுவதாகவும் அவசியமான ஒதுக்குத் தேவை 0.25 ஆகவும் உள்ளதாகக் கருதுக.

(a) இப்புதிய வைப்புக்கான ஒதுக்குத் தேவையின் அளவு யாது? (02 புள்ளிகள்)

(b) இப்புதிய வைப்பின் அடிப்படையில் வங்கி வழங்கக்கூடிய அதிகூடிய கடன் தொகை யாது? (02 புள்ளிகள்)

(v) இலங்கையில் நிதிமுறைமையின் உறுதிப்பாட்டைப் பேணுவதில் துணைநில் வீத செல்வழியின் (standing rate corridor) வகிபாகத்தை விளக்குக. (04 புள்ளிகள்)

6 (i)- மொஉஉ சுருக்கியானது நடப்பாண்டின் மொத்த உள்நாட்டு உற்பத்தியில் பணவீக்கத்தின் தாக்கத்தை நடப்பாண்டு உற்பத்தியை அடியாண்டு காலப்பகுதியின் உற்பத்தி மட்டத்திற்கு மாற்றியமைப்பதன் மூலம் கணிப்பீடு செய்யும் ஒரு பொருளாதார அளவையாகும் மொஉஉ சுருக்கியானது பின்வரும் சூத்திரத்தினால் கணிப்பிடப்படும்:

**(01 புள்ளி)**

- மொ.உ.உ சுருக்கி = $\dfrac{\text{பெயரளவு மொ.உ.உ (நடைமுறைச்சந்தை விலைகளில் மொ.உ.உ)}}{\text{மெய் மொ.உ.உ (நிலையான விலைகளில் மொ.உ.உ)}} \times 100$

**(01 புள்ளி)**

- மொஉஉ சுருக்கியானது பொருளாதாரத்தில் உற்பத்தி செய்யப்பட்ட எல்லாப் பொருள்கள் சேவைகளின் விலைகளையும் உள்ளடக்குகிறது.
  நுகர்வோர் விலைச்சுட்டெண்னானது கொழும்பு மாவட்டத்தில் நகர்ப்பறத்தில் வாழும் மக்களின் தெரிவு செய்யப்பட்ட ஒரு கூடை நுகர்வுப் பொருள்கள் சேவைகளின் விலைகளை மட்டுமே உள்ளடக்குகிறது.

- மொஉஉ சுருக்கியானது பொருளாதார எல்லைக்குள் உற்பத்தி செய்யப்படும் பொருள்கள் சேவைகளை மட்டுமே உள்ளடக்கும். ஆனால் கொழும்பு நுகர்வோர் விலைச்சுட்டெண் உள்நாட்டில் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள் சேவைகளுடன் இறக்குமதி செய்யப்பட்ட பொருள்கள் சேவைகளையும் உள்ளடக்கும்.

- கொழும்பு நுகர்வோர் விலைச்சுட்டெண்ணானது கொழும்பு மாவட்டத்தில் நகர்ப்பறத்தில் வாழும் மக்களின் வாழ்க்கைச் செலவு பற்றிய ஒரு குறிகாட்டியாகும். ஆனால் மொ.உ.உ சுருக்கியானது முழுப் பொருளாதாரத்தினதும் விலைநடத்தைகளின் ஒரு குறிகாட்டியாகும்.

- கொழும்பு நுகர்வு விலைச் சுட்டெண் நிலையான ஒரு கூடைநுகர்வுப் பொருள்களின் விலைகளை நுகர்வோரின் வரவு செலவுத்திட்டத்தில் அவற்றின் முக்கியத்துவத்திற்கமைய நிறையிடப்பட்டுக் கணிக்கப்படும் ஒரு சுட்டெண்ணாகும்.

மொ.உ.உ தெரிவு செய்யப்பட்ட ஒரு தொகுதி விலைகளை அடிப்படையாகக் கொண்டதல்ல. அத்துடன் அதில் உள்ளடக்கப்படும் பொருள்கள் சேவைகளின் உள்ளடக்கமும் காலப்போக்கில் வேறுபடலாம்

**(ஏதாவது இரு வேறுபாடுகளுக்கு 02 புள்ளிகள்)**

(ii) – நிறைதொழில் மட்ட மொ.உ.உற்பத்தியை விஞ்சியதாகக் காணப்படும் விரும்பப்படும் மொத்த செலவுகளின் அளவு ஒரு பணவீக்க இடைவெளி எனப்படுகிறது. இவ்விடைவெளியானது நாடு உச்ச இயலளவில் இயங்கும் போது உற்பத்தி செய்யப்படும் அளவுக்கு மேலதிகமாகவும் உயர்வாகவும் காணப்படும் மொத்த மிகைக் கேள்வியின் ஓர் அளவீடாகும்.

**(02 புள்ளிகள்)**




**(சரியான வரைபடத்திற்கு 02 புள்ளிகள்)**

(iii) – பணத்தின் பரிமாற்ற நோக்கக் கேள்வியானது பணத்தின் பரிமாற்ற ஊடகத்தொழிற்பாட்டுடன் தொடர்பு பட்டுள்ளதுடன் உத்தேசநோக்கப் பணக்கேள்வியானது பணத்தின் செல்வத்திரட்டாகச் செயற்படும் பணியுடன் தொடர்பு பட்டது.

**(02 புள்ளிகள்)**

– வரவுகளும் செலுத்தல்களும் பூரணமாக ஒருங்கிணைக்கப்படுவதில்லை எனவே நிறுவனங்களும் வீட்டுத்துறையினரும் தமது பரிமாற்றங்களை சீராக மேற்கொள்ளும் நோக்கில் பணக்கையிருப்புகளை வைத்திருக்க வேண்டும். இந்த நோக்கத்திற்காக மக்கள் வைத்திருக்க விரும்பும் பண அளவு பரிமாற்ற நோக்கப்பணக்கேள்வி எனப்படுகிறது.

பணமானது ஒரு அமையயச் செலவினைக் கொண்டுள்ளது. பணத்தை வட்டி ஈட்டித்தரும் பிணைகள் போன்ற சொத்துக்களில் முதலீடு செய்யாமல் பணத்தை வைத்திருப்பதனால்
இழக்கப்படும் வட்டி பணத்தைப் பணமாக வைத்திருப்பதன் அமையச் செலவாகும். ஆனால்

செல்வத்தை பிணைகள் போன்ற சொத்துக்களில் வைத்திருப்பதன் பிரதான பிரச்சினை பிணைகளின் விலைகள் மாறலாம் என்பதாகும். பிணைகளின் விலைகளில் ஏற்படும் மாற்றங்கள் மக்களின் பணக்கையிருப்பு மீதான கேள்வியைப் பாதிக்கும். பிணைகளின் விலைகள் அடிக்கடி மாற்றமடையும் என்னும் அறிவின் அடிப்படையில் மக்கள் தமது பணக்கேள்வித் தொகைகளை மாற்றியமைப்பது உத்தேச நோக்கப்பணக்கேள்வி எனப்படும்.

**அல்லது**

- பொதுமக்களின் பரிமாற்ற நோக்கப்பணக்கேள்வியானது நடைமுறை விலைகளில் கணிப்பிடப்பட்ட தேசிய வருமான மட்டத்துடன் நேர்க்கணிய ரீதியில் தொடர்பு பட்டுள்ளது.
உத்தேச நோக்கப் பணக்கேள்வியானது வட்டிவீதத்துடன் எதிர்க்கணிய ரீதியில் தொடர்பு பட்டுள்ளது. வட்டிவீதம் அதிகரிக்க உத்தேச நோக்கப்பணக்கேள்வி குறைவடையும் (மறுதலை உண்மை)

**(02 புள்ளிகள்)**

**(ஏதேனும் இருவேறுபாடுகளுக்கு 04 புள்ளிகள்)**

(iv) (a) புதிய வைப்புகளுக்காக தேவைப்படும் ஒதுக்குகள்:

- புதிய வைப்புத் தொகை = Rs. 10, 000
- தேவைப்படும் ஒதுக்கு வீதம் = 0.25 (=25%)
- தேவைப்படும் ஒதுக்குகள் = 10, 000 x 0.25 = Rs. 2,500

**(02 புள்ளிகள்)**

(b) கடனின் உச்ச அளவு:

- புதிய வைப்பின் அளவு = Rs. 10,000
- வைப்புக்காகத் தேவைப் படும் ஒதுக்கினளவு = 10, 000 x 0.25 = 2,500
- மிகை ஒதுக்குகள் = 10, 000 – 2, 500 = 7, 500

**(02 புள்ளி)**

- கடனின் உச்ச அளவு = மிகை ஒதுக்குகள் = Rs. 7, 500

(v) - இலங்கையின் பணக்கொள்கையின் முக்கிய கூறுகளில் ஒன்றான வட்டிவீதச் செல்வழியானது வங்கியின் பிரதான கொள்கை வீதங்களான துணைநில் வைப்பு வசதி வீதம் (Standing Deposit Facility Rate - SDFR); துணைநில் கடன்வசதி வீதம் (Standing Lending Facility Rate -SLFR) என்பவற்றினால் உருவாக்கப்பட்டுள்ளது. இவ்வட்டிவீதச் செல்வழியானது பணச்சந்தைகளில் ஓரிரவு வட்டிவீதத்தின் மேல் எல்லையையும் கீழ் எல்லையையும் உருவாக்கும். வங்கியின் பணக்கொள்கை நிலைப்பாடு தொடர்பில் சமிக்ஞை வழங்கும் பொறிமுறையான இவ்வீதங்கள் ஒழுங்கான கால இடைவெளிகளில் மறுசீராய்வு செய்யப்படுகிறது. பொதுவாக இவ்வாய்வு ஆண்டொன்றுக்கு எட்டுத்தடவைகள் மேற்கொள்ளப்பட்டு அவசியமாயின் திருத்தங்கள் மேற்கொள்ளப்படும்.

**(02 புள்ளிகள்)**

- துணைநில் வசதிகள் நாளாந்த ஏலத்தில் தமது திரவத்தன்மையை பெற்றுக்கொள்ள முடியாத பங்குபற்றும் நிறுவனங்களுக்குக் கிடைக்கும். சந்தையில் அதாவது ஏலத்தின் முடிவின் பின்னரும் ஒரு பங்குபற்றுநரிடம் மிகைத் (பணம்) திரவத்தன்மை இருப்பின் அவ்வாறான நிதிகளை துணைநில் வைப்பு வசதிகளின் கீழ் வைப்புச் செய்யலாம். அவ்வாறே ஒரு பங்குபற்றுநர் ஒரு பற்றாக்குறையை ஈடுசெய்ய திரவத்தன்மை தேவைப்படும் போது துணைநில் கடன் வசதியின் கீழ் மீள் கொள்வனவு அடிப்படையில் நிதிகளைக் கடன் பெறலாம். அதன்படி இவ்வசதிகள் வட்டிவீதங்களின் பரந்த ஏற்ற இறக்கங்கள் ஏற்படுத்துவதைக் கட்டுப்படுத்துகின்றன.

**(02 புள்ளிகள்)**

**7.** (i) கலப்புப் பொருளாதார முறைமையில் அரசாங்கத்தின் **நான்கு** பிரதான பணிகளைக் குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(ii) சந்தைப் பொருளாதாரத்தில் வளங்களின் ஒதுக்கீட்டு வினைத்திறனை எய்துவதில் உள்ள தடைகள் யாவை? (04 புள்ளிகள்)

(iii) தூய பொதுப் பொருள்கள், மேன்மைப் பொருள்கள், பொதுவளங்கள், இயற்கைத் தனியுரிமைகள் என்பவற்றை வரைவிலக்கணப்படுத்துக. (04 புள்ளிகள்)

(iv) ஒரு நாட்டிற்கு வரிகள் ஏன் அவசியம் என்பதை விளக்கி, நல்ல வரியொன்றின் விரும்பத்தக்க பண்புகளைச் சுருக்கமாகக் குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(v) அரசாங்கத்தின் வரவுசெலவுத்திட்டத்தில் 'அடிப்படை நிலுவை' என்பதனால் கருதப்படுவது யாது? அடிப்படை நிலுவையில் மிகை நிலையை உருவாக்கிக் கொள்வது ஏன் முக்கியமானதாகக் கருதப்படுகிறது? (04 புள்ளிகள்)

7 (i)
- வள ஒதுக்கீட்டில் வினைத்திறனை மேம்படுத்தல் (வெளிவாரிகள் காரணமாகவும் பொதுப் பொருள்களையும் மேன்மைப்பொருள்களையும் வழங்குவதன் காரணமாகவும் வினைத்திறனின்மை ஏற்படுகிறது)
- நியாயமான வருமானப்பங்கீட்டை உறுதிப்படுத்தல்
- பேரினப் பொருளாதார உறுதிப்பாட்டை அடைதல்
- பொருளாதார வளர்ச்சியையும் பேண்தகு அபிவிருத்தியையும் மேம்படுத்தல்
- வினைத்திறனாக இயங்கும்சந்தை முறைமைக்கான சட்டக்கட்டமைப்பினைத் தாபித்தல்
  (சட்டத்தையும் ஒப்பந்தங்களையும் அமுல்படுத்தல்)
- உட்கட்டமைப்பு அபிவிருத்தியை ஊக்குவித்தல்
- போட்டித்தன்மையை உறுதிப்படுத்தும் நிருவாகக் கட்டுப்பாடுகள்

**(ஒரு தொழிற்பாட்டிற்கு 01 புள்ளி மொத்தம் 04 புள்ளிகள்)**

(ii)
- பொதுப்பொருள் மற்றும் அரைகுறைப் பொதுப் பொருள் உற்பத்திக்காக வளங்களை ஒதுக்கீடு செய்யாதிருத்தல் அல்லது குறைவாக ஒதுக்கீடு செய்தல்
- உற்பத்தியிலும் நுகர்விலும் வெளிவாரிகள் காணப்படல்
- பொதுவளங்களின் மிகைப்பயன்பாடு
- வருமானச் சமமின்மை
- சந்தைச் சக்தி
- காரணி அசைவு
- தகவல்களின் ஒத்தமைவின்மை Information asymmetry
- தொலைந்து போன சந்தைகள்

**(ஒவ்வொன்றிற்கும் 01 புள்ளி வீதம் நான்கு காரணங்களுக்கு மொத்தம் 04 புள்ளிகள்)**

(iii) - தூய பொதுப்பொருள்கள் நுகர்வின்போது போட்டித்தன்மையற்றவையாகவும் விலக்குதல் விதிக்கு உட்பாடாதவையாகவும் இருக்கும்

- மேன்மைப் பொருள்கள் மற்றும் சேவைகள் என்பவை நுகர்வின் போது நேர்க்கணிய வெளிவாரிகளை உருவாக்கும் தன்மைகொண்டவையாகும். எனவே நுகர்வின் சமூக நன்மையானது தனியார் நன்மைகளை விஞ்சியதாகக் காணப்படும்.
- ஒரு பொதுவளம் என்பது போட்டித்தன்மை வாய்ந்ததாகவும் விலக்குதல் விதிக்கு உட்படாததாயும் இருக்கும். ஒரு பொது வளத்தை ஒருவர் பயன்படுத்தும் போது இன்னொருவருக்கு கிடைக்கக்கூடிய அதன் தொகைஅளவு குறைவடைவதனால் நுகர்வில் போட்டித்தன்மை வாய்ந்ததாகும்.

- இயற்கைத்தனியுரிமையில் அளவுத்திட்டச் சிக்கனங்கள் வெளியீட்டிற்குக் கேள்வி நிலவும் உற்பத்தி வீச்சு முழுவதும் காணப்படும். ஏற்கெனவே இயங்கிக்கொண்டிருக்கும் நிறுவனம் அதன் சாத்தியமான போட்டியாளர்களுடன் ஒப்பிடுகையில் மிகப்பெரிய அனுகூலத்தைக் கொண்டிருக்கும்.

**(ஒவ்வொன்றிற்கும் 01 புள்ளி வீதம் நான்கு விடயங்களுக்கு மொத்தம் 04 புள்ளிகள்)**

(iv) வரிகள் ஏன் அவசியம்?

- அரசாங்க செலவீடுகளை மேற்கொள்ளும் பொருட்டு வருவாய்களைத்திரட்டல்
- வெளிவாரிகளைச் சரிசெய்தல்:
- தனியுரிமை இலாபங்கள் மீது வரிவிதித்தல்
- பொதுப் பொருள்களையும் மேன்மைப் பொருள்களையும் வழங்க நிதிவழங்கல்
- மேன்மையற்ற (demerit goods) பொருள்களின் நுகர்வை ஊக்குவிக்காமைசெல்வம் மற்றும் வருமான சமமின்மைகளை குறைக்க வருமானப் பங்கீட்டை மாற்றியமைத்தல்
- கெயின்ஸிய பொருளாதார முகாமைத்துவம் (சமயோசிதமானஇறைக்கொள்கை)
- மிகையான ஒரு பணவீக்கத்தை ஏற்படுத்தாமல் நிறைதொழில் மட்டம் நிலையான பொருளாதார வளர்ச்சி ஆகிய குறிக்கோள்களை அடைவதற்காக மொத்தக் கேள்வி மட்டத்தைக் கட்டுப்படுத்தல்.
- சென்மதி நிலுவைப் பிரச்சினைகளை மட்டுப்படுத்தல்
- இளநிலைக் கைத்தொழில்களைப் பாதுகாத்தல்

**(இரண்டு காரணங்களுக்கு 01 புள்ளி மொத்தம் 02 புள்ளிகள்)**

நல்ல வரியொன்றின் விரும்பத்தக்க பண்புகள்:

- ஒப்புரவு: வரியானது வரியிறுப்பாளரின் செலுத்தும் இயலுமையை அடிப்படையில் அமைய வேண்டும்.
- சிக்கனம்: வரிச்சேகரிப்பு இலகுவானதாகவும் மலிவானதாகவும் நிர்வகிக்கப்படல் வேண்டும், இதனால் வரிச்சேகரிக்கும் செலவுடன் ஒப்பிடுகையில் வரிச்சேகரிப்பு விளைவு உச்சப்படுத்தப்படும்.
- நிச்சயத்தன்மை: எதனை எதற்காக எப்போது எங்கே எவ்வாறு செலுத்த வேண்டும் என்பது வரியிறுப்பாளருக்குத் தெரிந்திருக்க வேண்டும்

- வினைத்திறன்: ஒரு வரியானது பக்க விளைவுகள் இன்றி அதன் உத்தேசிக்கப்பட்ட நோக்கத்தை அடைய வேண்டும்
- நெகிழ்தன்மை: புதிய சூழ்நிலைகளை எதிர்கொள்ள சில வரிகளை இலகுவாக மாற்றிமைக்கப்பட வேண்டியிருக்கும்

**(இரண்டு பண்புகளுக்கு 01 புள்ளி மொத்தம் 02 புள்ளிகள்)**

(v) - பாதீட்டின் ஆரம்ப நிலுவை என்பது நன்கொடைகளை உள்ளடக்கிய மொத்த அரசாங்க வருவாய்களுக்கும் வட்டிச் செலுத்தல்கள் தவிர்ந்த அரசாங்க செலவுகளுக்கும் இடையிலான வேறுபாடாகும். வேறுவகையில் வரைவிலக்கணப்படுத்துவதாயின் பாதீட்டின் மொத்தக் குறைநிலைக்கும் வட்டிச் செலுத்தல்களுக்கும் இடையிலான வேறுபாடாகும்

(வினா முயற்சிக்கப்படின் புள்ளிகள் வழங்கவும்)

**(02** புள்ளிகள்**)**

- பாதீட்டின் ஆரம்ப நிலுவையானது, அரசாங்கப் படுகடன் இயங்கியலைத் தீர்மானிக்கும் ஒரு முக்கிய காரணியாகும். மொ.உ.உற்பத்தியின் சார்பாக அரசாங்கக் கடன்சதவீதத்தை நிலைப்படுத்தி அதனை ஒரு குறித்த பெறுமானத்தை நோக்கி குறைந்து செல்லும் பாதையில் செலுத்த வேண்டுமாயின் போதியளவு முதனிலை மிகைநிலையை நீண்ட காலத்திற்கு உருவாக்க வேண்டும

- வட்டிச் செலுத்தல்கள் உள்ளடங்கலாக செலவுகளை ஈடுசெய்ய அரசாங்கத்தின் கடன்பெறும் தேவைகளை முதனிலை பற்றாக்குறைகாட்டுகிறது. எனவே முதனிலை பற்றாக்குறை பூச்சியமாயின் பாதீட்டுக்குறை நிலை வட்டிச் செலுத்தல்களுக்கு சமனாகும். இதனால் ஏற்கெனவே உள்ள கடன்கள் மேலும் அதிகரிக்காது

- முதனிலை நிலுவையானது இறைப் பொறுப்பின்மையை (fiscal irresponsibility) காட்டும் ஒரு அடிப்படை அளவையாகும். அது தற்போதை இறை முயற்சியின் ஒரு குறிகாட்டியாக கருதப்படுகிறது. முன்னைய கடன் அளவின் அடிப்படையிலேயே வட்டிச் செலுத்தல்கள் நிணயிக்கப்படுகின்றன. மொ.உ.உற்பத்தியில் உயர் வெளிநின்ற கடன்களைக் கொண்டுள்ள நாடுகள் முதனிலை மிகைநிலையை உருவாக்கிக் கொள்வது முக்கியமாகும். பொதுவாக இது ஒரு முக்கிய தேவைப்பாடாக இருந்த போதிலும் கடன் மொ.உ.உ விகித்தைக்குறைப்பதில் போதுமான ஒன்றல்ல

**(ஏதேனும் இரு காரணங்களுக்கு 01 புள்ளி மொத்தம் 02 புள்ளிகள்)**

**8.** (i) இலங்கையின் பிரதான ஏற்றுமதிகள் **நான்கினையும்** இறக்குமதிகள் **நான்கினையும்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(ii) 'போட்டி நன்மை' (competitive advantage) என்றால் என்ன? போட்டி நன்மையை உருவாக்கும் மூலாதாரங்கள் எவை? (04 புள்ளிகள்)

(iii) கருதுகோள்ரீதியான பொருளாதாரமொன்றில் சென்மதி நிலுவைப் பரிமாற்றங்களின் சுருக்கம் பின்வரும் அட்டவணையில் தரப்பட்டுள்ளது. (எல்லா பெறுமானங்களும் பில்லியன் ரூபாவிலாகும்.)

| விடயம் | பெறுமானம் | விடயம் | பெறுமானம் |
|---|---|---|---|
| பொருள்கள் ஏற்றுமதி | 1 500 | அரசாங்கத்தின் தேறிய மூலதன மாற்றல்கள் | 120 |
| பொருள்கள் இறக்குமதி | 1 300 | தனியார் தேறிய மூலதன மாற்றல்கள் | 80 |
| சேவைகள் ஏற்றுமதி | 500 | தேறிய நேரடி முதலீடுகள் | 350 |
| சேவைகள் இறக்குமதி | 400 | தேறிய பட்டியலிடப்பட்ட முதலீடுகள் | 150 |
| முதலீட்டு வருமானப் பெறுகைகள் | 800 | ஏனைய தேறிய முதலீடுகள் | 120 |
| முதலீட்டு வருமானச் செலுத்தல்கள் | 600 | ஒதுக்குச் சொத்துக்கள் | 160 |
| தேறிய நடைமுறை மாற்றல்கள் | 100 | பிழைகளும் விடுபாடுகளும் | 20 |

மேலுள்ள தரவுகளைப் பயன்படுத்தி பின்வருவனவற்றைக் கணிப்பிடுக.

(a) வர்த்தக நிலுவை (02 புள்ளிகள்)
(b) நடைமுறைக் கணக்கு நிலுவை (02 புள்ளிகள்)
(c) நிதிக்கணக்கு நிலுவை (02 புள்ளிகள்)
(d) தேறிய ஏற்றுமதிகள் (02 புள்ளிகள்)

(iv) 2018 இன் இறுதிப் பகுதியில் அமெரிக்க டொலருடன் ஒப்பிடும்போது இலங்கை ரூபாவின் பெறுமதி துரிதமாகத் தேய்வடைந்து சென்றமைக்கான காரணங்களை விளக்குக. (04 புள்ளிகள்)

(i)

| ஏற்றுமதிகள் | இறக்குமதிகள் |
|---|---|
| - ஆடைகளும் புடைவைகளும் | - எரிபொருள் |
| - தேயிலை | - கட்டடப் பொருள்கள் |
| - பெற்றோலியப் பொருள்கள் | - இயந்திரங்களும் உபகரணங்களும் |
| - வாசனைத்திரவியங்கள் | - வாகனங்கள் |

**(ஒவ்வொரு ஏற்றுமதி ஏற்றுமதி மற்றும் இறக்குமதி வகைக்கும் தலா 0.5 புள்ளி வீதம் ஏற்றுமதிகளுக்கு மொத்தம் 02 புள்ளிகள் இறக்குமதிகளுக்கு மொத்தம் 02 புள்ளிகள்)**

(ii) - போட்டி நன்மை என்பது ஒரு வியாபார நிறுவனம் அதன் போட்டியாளர்களுடன் ஒப்பிடுகையில் அவர்களுக்கு மேல் கொண்டுள்ள நன்மையாகும். இதனை வாடிக்கையாளர்களுக்கு அவர்கள் வழங்கும் சிறந்த மற்றும் உயர் பெறுமதியின் மூலம் அடையலாம்.
போட்டியாளர்களுடன் ஒப்பிடுகையில் ஒரே நன்மையினை குறைந்த செலவில் வழங்க முடியுமாயின் போட்டி நன்மை நிலவுவதாகக் கொள்ளலாம். அல்லது போட்டியாளரை விட உயர்வான நன்மையை அல்லது சேவையை வழங்கல் (பேதப்படுத்தல் நன்மை) ஊடாக அதிக விலையை நியாயப்படுத்தல். இவ்வெண்ணக்கருவை ஒரு நிறுவனத்திற்கோ அல்லது முழு நாட்டிற்கோ பயன்படுத்தலாம்.
போட்டி நன்மை என்பது மலிவான ஊழியம் என்று தாராளமாக உள்ளது நல்ல ஒரு பொருளாதாரத்திற்கு இயற்கை வளங்கள் தேவையில்லை என்னும் சிந்தனையில் பெருமளவு தங்கியுள்ளது. **(02 புள்ளிகள்)**

- போட்டி நன்மையின் மூலாதாரங்கள்:

செலவு நன்மையின் மூலாதாரங்கள்:

- உயர்ந்த உற்பத்தித் திறன் மட்டங்கள்
- உயர்ந்த இயலளவுப் பயன்பாடு
- உற்பத்தி உள்ளீடுகளுக்கு ஆகக் குறைந்த விலைகளைப் பெறும் பொருட்டு பேரம் பேசும் சக்தியைப் பயன்படுத்தல்
- உற்பத்திச் செயன்முறையில் தொழில் நுட்பத்தின் வினைத்திறனான பயன்பாடு
- மிகவும் வினைத்திறனான வினியோக மார்க்கங்களை அடைதல்.

பொருள் வேறாக்கத்தின் மூலாதாரங்கள்:

- அதியுயர்/ மீயுயர் தரமுடைய பொருள்கள்
- வர்த்தகக்குறியிடல் (வலுவான நுகர்வோர் அங்கீகாரம் மற்றும் விருப்பம் வர்த்தகக் குறியிடல் மீதான விசுவாசம்)
- புத்தாக்கங்கள்
- உற்பத்திகள் மற்றும் புலமைச் சொத்துக்கள்
- தொடர்ச்சியான ஊக்குவிப்புகள் – விளம்பரம் மற்றும் அனுசரணை மூலம்

**(இரு மூலாதாரங்களுக்கு 01 புள்ளி மொத்தம் 02 புள்ளிகள்)**

(iii) (a) வர்த்தக நிலுவை = பொருள் ஏற்றுமதி – பொருள் இறக்குமதி **(01 புள்ளி)**
= 1500 – 1300 = Rs. 200 பில்லியன் **(01 புள்ளி)**

(b) நடைமுறைக்கணக்கு நிலுவை = வர்த்தக நிலுவை + பணிகள் கணக்கு நிலுவை +
முதனிலை வருமானக்கணக்கு நிலுவை + இரண்டாம் நிலை வருமானக்கணக்கு நிலுவை **(01 புள்ளி)**

நடைமுறைக்கணக்கு நிலுவை = 200 + (500 – 400) + (800 – 600) +100 = 600
**(01 புள்ளி)**

(c) நிதிக்கணக்கு நிலுவை = தேறிய நேரடி முதலீடு + தேறிய பட்டியல் முதலீடுகள் + ஏனைய தேறிய முதலீடுகள் + ஒதுக்குச் சொத்துகள்
**(01 புள்ளி)**

நிதிக்கணக்கு நிலுவை = 350 + 150 + 120 + 160 = Rs. 780 பில்லியன்

**(01 புள்ளி)**

(d) தேறிய ஏற்றுமதிகள் = (பொருள் ஏற்றுமதிகள் – பொருள் இறக்குமதிகள்) + (பணிகள் ஏற்றுமதிகள் – பணிகள் இறக்குமதிகள்)
**(01 புள்ளி)**

தேறிய ஏற்றுமதிகள் = (1500 – 1300) + (500-400) = 200 + 100 = Rs. 300 பில்லியன்

**(01 புள்ளி)**

(iv) -2018 இன் முதல் நான்கு மாதங்களில் சார்பளவில் நிலையானதாக இருந்த அமெரிக்க டொலருக்கும் இலங்கை ருபாவுக்கும் இடையிலான பெயரளவு நாணயமாற்றுவீதம் அதன்பின்னர் குறிப்பாக 2018இன் இறுதிப்பகுதியில் கணிசமான அழுத்தங்களுக்கு உட்பட்டது.

- வெளிநாட்டு நாணயமாற்றுச் சந்தையில் முறையான ஒரு சீராக்கத்தை ஏற்படுத்தும் நோக்கில் மத்திய வங்கியானது தலையீட்டை மேற்கொண்டிருந்த

போதிலும் நாணயமானது 2018 டிசம்பர் மாதமுடிவில் முன்னைய ஆண்டைவிட 19.6 வீத பெறுமதித்தேய்வுக்குட்பட்டிருந்தது.

உள்ளூர்க்காரணிகளும் வெளிநாட்டுக்காரணிகளும் இலங்கை நாணயத்தின் துரித பெறுமதித் தேய்வுக்குப் பங்களிப்புச் செய்தன.

உள்ளூர்க்காரணிகள்:

- ஏற்றுமதிச் சம்பாத்தியங்களின் மெதுவான வளர்ச்சி
- இறக்குமதிச் செலவினங்களின் துரித அதிகரிப்பு (வாகனங்கள் தங்கம் போன்ற அத்தியாவசியமல்லாப் பொருள்கள்)
- உயர்வான கடன்தொகை மீளச்செலுத்தல் மற்றும் வட்டிச் செலுத்தல்களுடன் இலங்கையின் கடன் சேவைச் செலுத்தல்களில் ஏற்பட்ட துரித அதிகரிப்பு
- குறிப்பாக ஆண்டின் இறுதி மூன்று மாதங்களில் ஏற்பட்ட சாதகமற்ற அரசியல் நிகழ்வுகள்
- ஏற்றுமதிகளில் இருந்தான டொலர் வருவாய்கள் குறைவாக இருந்தமை.
- சர்வதேச நாணய நிதியத்தின் விரிவாக்கப்பட்ட நிதிவசதியின் EFF மூலம்
- இலங்கைக்கு வழங்கப்பட்ட கடனின் 6வது தவணை காலதாமதமாகியதால் ஏற்பட்ட எதிர்க்கணிய சிந்தனைப் போக்குகள்.
- உத்தியோகபூர்வ ஒதுக்குகளின் பற்றாக்குறை

வெளிநாட்டுக்காரணிகள்:

- அமெரிக்காவின் மத்தியவங்கி Federal reserve Bank தொடர்ச்சியாக நான்கு முறை வட்டிவீதங்களை உயர்த்தியது இதனால் தீரிவமான மூலதன வெளியேற்றம் நிகழ்ந்ததுடன் டொலருக்கான இறக்குமதியாளர் கேள்வி உயர்ந்தது
- பெற்றோலிய விலை உயர்வு
- மூலதன வெளியேற்றம்

**(ஒவ்வொரு காரணிக்கும் 01 புள்ளி வீதம் நான்கு காரணிகளுக்கு மொத்தம் 04 புள்ளிகள்)**

**9.** (i) பொருளாதார வளர்ச்சியை, வாழ்க்கைத் தரத்தில் முன்னேற்றத்தை ஏற்படுத்தும் வகையில் மாற்றியமைப்பதற்கு அவசியமான நிபந்தனைகள் யாவை? (05 புள்ளிகள்)

(ii) 'சமூக பாதுகாப்பு' என்பதனாற் கருதப்படுவதென்ன? இலங்கையின் சமூக பாதுகாப்பு நிகழ்ச்சித்திட்டத்தில் உள்ளடங்கியுள்ள **மூன்று** பிரதான கூறுகளைக் குறிப்பிடுக. (05 புள்ளிகள்)

(iii) "ஜினி குணகமானது வருமான சமமின்மையை அளவிடும் உபயோகமுள்ள சுருக்கப் புள்ளிவிபரமாயினும், அதனால் லோரன்ஸ் வளையிகள் வழங்குவதுபோல அதிகளவு விபரமான தகவல்களை வழங்க முடியாதுள்ளது." விளக்குக. (05 புள்ளிகள்)

(iv) இலங்கையின் தொழிற்படையில் ஆண்-பெண் பங்கு கொள்ளல் வீதத்தில் நிலவும் பாரிய இடைவெளிக்கான காரணங்கள் யாவை? (05 புள்ளிகள்)

9. (i)

- பொருளாதார வளர்ச்சி என்பது காலப்பகுதியொன்றில் பொருள்கள் சேவைகளின் பௌதீக அளவில் ஏற்படும் விரிவாக்கமாகும். அதன் மூலம் வாழ்க்கைத்தரத்தில் ஏற்படும் முன்னேற்றங்களோடு தொடர்புடைய சமூகத்தின் தரத்தில் ஏற்படும் மாற்றங்கள் உள்ளடக்கப்படுவதில்லை. உயர்ந்த வாழ்க்கைத்தரத்தை எய்த உயர்வான பொருளாதார வளர்ச்சி அவசியமாயினும் அது பொருள்களை மையப்படுத்தியதாக அல்லாமல் மக்களை மையப்படுத்தியதாக இருக்கவேண்டும்

- பொருளாதார வளர்ச்சியை அடைந்துள்ள பல நாடுகள் வாழ்க்கைத்தர மேம்பாட்டை ஏற்படுத்துவதில் தோல்வியடைந்துள்ளன. பொருளாதார வளர்ச்சி பற்றிய தகவல்களில் வெளிப்படுத்தப்படுவதைப் போல சுகாதாரம் கல்வி மற்றும் அதனோடு தொடர்புடைய நடவடிக்கைகள் மீது மேற்கொள்ளப்படும் அதிகரித்த செலவீடுகளின் அடிப்படையில் மனித அபிருத்தியை நோக்குவது போதுமானதன்று.

- வளர்ச்சியானது மனிதர்களின் இயலுமையை விரிவாக்குவதில் கவனஞ்செலுத்தவேண்டும். அபிவிருத்தி என்பது இயலுமையை அல்லது ஆற்றலை விரிவுபடுத்தலாகும். எனவே அது மக்கள் எவற்றையெல்லாம் செய்யும் ஆற்றலுடையவர்களாக உள்ளனர் என்பதில் கவனஞ் செலுத்த வேண்டும். உதாரணமாக அவர்களால் எழுத வாசிக்க முடியுமா? அவர்கள் அதிக காலம் வாழ்கின்றனரா? என்பதே முக்கியமானது மாறாக சுகாதாரத்தின் மீது எவ்வளவு செலவிடப்பட்டது என்பதன்று.

- வாழ்க்கைத்தர மேம்பாடென்பது பற்றாக்குறையை நீக்குவது அல்லது தெரிவுகளை விரிவாக்குவதாகும். பற்றாக்குறை என்பது வறுமையின் மீது ஒரு பல்பரிமாணப் பார்வையை பிரதிநித்துவப் படுத்துகிறது. அதில் பசி எழுத்தறிவின்மை நோய் மற்றும் நலிந்த உடல் நலம் அதிராரமற்ற நிலை குரலெழுப்ப முடியாமை பாதுகாப்பின்மை அவமானப்படுத்தப்படல் அடிப்படை உட்கட்டமைப்பு வசதிகளைப் பெற்றுக்கொள்ள முடியாமை என்பன உள்ளடக்கப்படுகின்றன.

- பொருளாதார வளர்ச்சியானது வாழ்க்கைத்தரத்தை மேம்படுத்துவது தொடர்பில் அர்த்தமுள்ளதாக அமைய வேண்டுமானால் அது வளர்ச்சிச் செயன்முறையின் ஊடாக தொழிலின்மை வருமானச் சமமின்மை என்பவற்றைக் குறைப்பதை உறுதிசெய்ய வேண்டும்.
- வளர்ச்சிச் செயன்முறையானது பெண்களின் வகிபாகம் மற்றும் சமத்துவம் குறித்து அதிக கவனஞ் செலுத்த வேண்டும். ஏனெனில் அவர்கள் ஆண்களோடு ஒப்பிடுகையில் அதிகளவு வறுமை நிலையில் உள்ளனர் அத்துடன் உற்பத்தி நடவடிக்கைகளிலும் பொருளாதார வளர்ச்சியிலும் முக்கிய பங்காற்றுகின்றனர். தேவைப்படுவது யாதெனில் பால்நிலை உணர்திறன் கொண்ட கலாசாரமாகும். பெண்களை தமக்குக்கீழ் நிலையில் உள்ளவர்களாகக் கருதும் நிலையின் மாற்றமும் இதில் உள்ளடங்கும்.

- வளர்ச்சியானது மக்களில் வாழ்க்கைத்தரத்தை மேம்படுத்த வேண்டுமாயின் அது அனைத்தையும் உள்ளடக்கியதாக இருக்க வேண்டும்.
  அனைத்தையும் உள்ளடக்கிய வளர்ச்சியானது பொருளாதார வளர்ச்சியின் வேகம் மற்றும் விதம் என்பவற்றைத் தாண்டியதாக இருக்கும். இது வளர்ச்சிச் செயன்முறையிலிருந்து ஒதுக்கப்பட்ட மக்களுக்கு வாய்ப்புகளை வழங்க அவசியமானதாகும். இதனால் சமூகத்தின் எல்லா அங்கத்தவர்களும் வளர்ச்சிக்குப் பங்களிப்புச் செய்து அதன் நன்மைகளை அனுபவிக்க முடியும்.

.

- பொருளாதார வளர்ச்சி வாழ்க்கைத்தரத்தை மேம்படுத்த வேண்டுமாயின் பேண்தகு அபிவிருத்தியை உறுதிசெய்தாலேயே சாத்தியமாகும். தற்போது அதிகரித்த வருமானம் எதிர்காலத்தில் சுற்றாடலானது அதேயளவு வருமான மட்டத்தைப் பெறும் ஆற்றலைக் குறைக்காமல் இருக்கும் வழியினைக் காண வேண்டும்
- பொருளாதார வளர்ச்சியுடன் அரசியல் மாற்றமும் அபிவிருத்திக்கு முக்கியமானதாகும். அரசியல் மற்றும் சிவில் சுதந்திரங்கள் வாழ்க்கைத்தரத்துடன் இணைந்து செல்வனவாகும்.

**(ஒவ்வொன்றிற்கும் 01 புள்ளி மொத்தம் 5 புள்ளிகள்)**

(ii) - இடம் பெயர்ந்தோர் நோயாளிகள் உடல்ரீதியிலான குறைபாடுகளுடன் வாழ்வோர் முதியோர் பெண்கள் சிறுவர்கள் போன்ற வறிய மற்றும் பாதிக்கப்படக்கூடிய நிலையில் உள்ளவர்களை பாதுகாப்பதில் சமூகபாதுகாப்பு அக்கறை செலுத்துகிறது

**(01 புள்ளி)**

- சமூக பாதுகாப்பின் நோக்கம் பரந்து பட்டதாகும். வறுமை மற்றும் பாதிக்கப்படக்கூடிய தன்மையைக் குறைத்தல் மனித மூலதனத்தைக் கட்டியெழுப்பல் பெண்களையும் சிறுமிகளையும் வலுவூட்டல் வாழ்வாதாரத்தை மேம்படுத்தல் பொருதாளாதார மற்றும் ஏனைய அதிர்ச்சிகளுக்கு பதிலளித்தல் போன்றன சமூக பாதுகாப்பின் நோக்கங்களாகும். **(01 புள்ளி)**

- வருமான உதவி நிகழ்ச்சித்திட்டங்கள்
  - வறியவர்களுக்கான சமுர்த்தி வருமான மாற்றல்
  - யுத்தத்தில் உயிரிழந்த படையினரின் குடும்பங்களுக்கும் அங்கவீனமடைந்த சிப்பாய்களுக்குமான வருமான உதவி
  - யுத்தத்தினால் இடம்பெயர்ந்த ஆட்களுக்கான உதவி
  - அங்கவீனமடைந்தவர்களுக்கான மாதாந்த கொடுப்பனவு
  - முதியோர்களுக்கான மாதாந்தக் கொடுப்பனவ
  - பொது மக்களுக்கு உதவும் மாதாந்த கொடுப்பனவுகள்
  - தொழில் புரியமுடியாதளவு நோய்வாய்ப்பட்டுள்ள மக்களுக்கான உதவி
  - வரட்சிகள் வெள்ளப்பெருக்குகள் புயல்கள் போன்ற இயற்கை அனர்த்தங்களால் பாதிக்கப்பட்ட மக்களுக்கான உதவிகள்.
- போஷாக்கு உதவி நிகழ்ச்சித்திட்டங்கள்
  - திரிபோஷ தேசிய நிரப்பு உணவு நிகழ்ச்சித்திட்டம் (மாதாந்தம் 2 திரிபோஷ பைக்கற்றுகளை வழங்கல்)
  - போஷாக்கு கொடுப்பனவு (போஷாக்கு பொதி உணவு முத்திரை மாதாந்தம் ருபா.2000)
  - முன்பள்ளிச் சிறுவர்களுக்கான துாய்மையான பால்

**(ஒவ்வொன்றிற்கும் 01 புள்ளி வீதம் மூன்று விடயங்களுக்கு 03 புள்ளிகள்)**

(iii) - ஜினி குணகம் வருமானச்சமமின்மையை அளவிடப் பரவலாகப் பயன்படுத்தப்படும் அளவையாகும்; அது ஒரு பொரளாதாரத்தின் வருமானப்பங்கீடானது பூரண வருமான சமபங்கீட்டிலிருந்து எவ்வளவு துாரம் விலகியுள்ளது என்பதை அளவிடுகிறது. லோரன்ஸ் வளையீக்கு உட்பட்ட பிரதேசத்தை $45^0$ கோட்டிற்கு உட்பட்ட பிரதேசத்தின் விகிதமாகக் கணிப்பிடல்

**(01 புள்ளி)**

- லோரன்ஸ் வளையியானது வருமான சமமின்மையைக் காட்டும் இலகுவான ஒரு வழியாகும்.
  லோரன்ஸ் வளையியானது சனத் தொகையில் ஒரு குறித்த சதவீதத்தினர் பெற்றுக்
  கொள்ளும் வருமானச் சதவீதத்தை வெளிப்படுத்தும். அது பூரண வருமான சமபங்கீட்டைக்காட்டும் 45 பாகைக் கோட்டின் சார்பாக வெளிப்படுத்தப்படும். 45 பாகைக் கோடானது சனத் தொகையின் ஒரு குறித்த சதவீதத்தினர் அதே சதவீத வருமானத்தை பெற்றுக் கொள்வதை காட்டும். எனவே 45 பாகைக் கோட்டிலிருந்து லோரன்ஸ் வளையி விலகிச் செல்வது வருமானச் சமபங்கீடின்மை அதிகரித்துச் செல்வதைக் காட்டும்.

**(01 புள்ளி)**

- வெவ்வேறு வருமான வகுப்பினர் மத்தியில் காணப்படும் வருமான ஏற்றத்தாழ்வுகள் பற்றிய விபரங்களை ஜிணி குணகம் வழங்குவதில்லை. முழுச் சனத்தொகை மத்தியில் நிலவும் வருமான ஏற்றத்தாழ்வுகள் பற்றிய மேலோட்டமான ஒரு தகவலை மடடுமே அது வழங்குகிறது. ஆனால் லோரண்ஸ் வளையியானது வெவ்வேறு வருமான வகுப்பினர் மத்தியில் நிலவும் ஏற்றத்தாழ்வுகள் பற்றிய விரிவான தகவல்களை வழங்குகிறது.

**(02 புள்ளிகள்)**

- ஒரேமாதிரியான வருமானங்களையும் ஜிணிகுணகங்களையும் கொண்டுள்ள நாடுகளிலும் அவற்றின் வருமானப்பங்கீடு வேறுபடலாம். ஏனெனில் அவற்றின் லோரண்ஸ் வளையிகள் வேறுபட்ட வடிவங்களைக் கொண்டிருந்தாலும் அவற்றின் ஜிணிகுணகங்கள் ஒன்றாக இருக்கலாம். ஒரு தீவிரமான உதாரணமாக ஒர பொருளாதாரத்தில் வீட்டுத்துறையினரில் பாதியளவினர் வருமானம் உழைக்காத சந்தர்ப்பத்திலும் மற்றைய பாதியினர் வருமானத்தை சமமாகப் பங்கிட்டுக்கொண்டால் ஜிணிகுணகம் 0.5 ஆகும். இதனால் நாடுகளுக்கிடையே வருமான ஏற்றத்தாழ்வில் நிலவும் வேறுபாடுகளை காண்பதற்கான ஒரு அடிப்படையாக ஜிணிகுணகத்தைப்பயன்படுத்துவது பிழையான முடிவுகளுக்கு இட்டுச் செல்லலாம். (01 புள்ளி)

**(மொத்தம் 05 புள்ளிகள்)**

(iv) - இலங்கையானது கல்வி மற்றும் சுகாதாரத்துறைகளில் பால்நிலைச் சமத்துவத்தை ஏற்படுத்துவதில் ஒரு பிராந்திய முன்னோடியாக இருந்து வந்துள்ளது. ஆனால் இது தொழிற்படையில் பெண்களின் துடிப்பான பங்குபற்றலில் பிரதிபலிக்கவில்லை. பிராந்தியத்தில் உள்ள எழுச்சிபெற்றுவரும் நாடுகளுடனும் சில குறைந்த வருமானம் பெறும் அபிவிருத்தியடைந்து வரும் நாடுகளுடனும் ஒப்பிடும் போது இலங்கையில் இது குறைவாகவே உள்ளது. தொழிற்படையின் பங்குபற்றல் வீதத்தில் நிலவும் பாரிய பால்நிலை இடைவெளிக்கு பலகாரணங்கள் உள்ளன.

- வீட்டுத்துறைப் பொறுப்புக்களை (சிறுவர்களையும் முதிய பெற்றோரையும் கவனித்துக் கொள்ளல்) ஏற்றுக் கொள்வதற்காக பெண்கள் தொழிற்படையிலிருந்து விலக நிர்ப்பந்திக்கப்படுகின்றனர்.
- வீட்டுத்துறையின் பொறுப்புகளும் கடமைகளும் அதிகமாக பெண்கள் மீதே சுமத்தப்படுகின்றன.

- தொழிற் சந்தையின் தேவைகளுக்கமைய பொருத்தமான முறையான திறன்களை பெண்கள் பெற்றுக் கொள்ளாத படியினால் மனித மூலதனம் என்ற ரீதியில் பெண்கள் பொருத்தமற்ற நிலையில் உள்ளனர்.
- தொழிற் தேடல் தொழிலில் அமர்த்தல் மற்றும் பதவிஉயர்வுச் செயன் முறைகளில் பால்நிலைப் பாகுபாடு நிலவுகிறது

- வீட்டு வேலைகள் முதியோர் பராமரிப்பு மற்றும் சிறுவர் பராமரிப்பு தொடர்பில் பெண்களின் பொறுப்பு பற்றிய நிலவும் சமூக ஒழுக்காறுகள் தொழிற்படையில் அவர்கள் இணைவதையும் தொழிலைப் பெற்றுக் கொள்வதிலும் தடையாக அமைகின்றன.

- பால்நிலை பற்றிய ஒழுக்காறுகள் ஆண்களைவிட பெண்களின் அசைவினை – குறிப்பாக தொழிலுக்காகப் பெண்கள் பயணம் செய்வதை-மட்டுப்படுத்துகின்றன. இது வேலைக்காக பெண்கள் பாதுகாப்பான அத்துடன் சௌகரியமான போக்குவரத்தைப் பெறுவதைத் தடைசெய்கின்றது.

- தொழிற்சந்தையில் பால்நிலைக் கூலி இடைவெளி நிலவுகிறது. (ஒரேமாதிரியான உற்பத்திப் பண்புகளைப் பகிர்ந்து கொண்டிருந்தாலும் சராசரியாக ஆண்களை விட பெண்கள் குறைவான வேதனங்களையே பெறுகின்றனர். இது பெண்கள் தொழில் வாய்ப்புக்களைத் தேடுவதை ஊக்குவிப்பதில்லை.

- பாரம்பரிய உளப்பாங்குகள்: ஆண்கள் பொருளீட்டுவதில் ஈடுபடவேண்டும் பெண்கள் வீட்டுப்பொறுப்புகளை ஏற்கவேண்டும் என நாட்டில் ஆழவேருன்றியுள்ள சமூக ஒழுக்காறுகள். பெற்றோர் மகள்மாரைவிட மகன்மாரையே தொழில் செய்ய (குறிப்பாகத் தனியார் துறையில்) தூண்டுகின்றனர். இது பெண்கள் பொருளாதார சுதந்திரத்தை அடைவதைத் தடைசெய்கிறது.

**(ஒவ்வொன்றிற்கும் 01 புள்ளி வீதம் 05 காரணங்களுக்கு 05 புள்ளிகள்)**

**10.** (i) பொருளாதார வளர்ச்சி, அரச கடனின் பேண்தகு தன்மை என்பவற்றை எய்துவது தொடர்பில் அண்மைய வருடங்களில் இலங்கையின் செயலாற்றத்தைச் சுருக்கமாக ஆராய்க. (05 புள்ளிகள்)

(ii) இலங்கை உயர்மட்ட வருமான நாடு என்னும் அந்தஸ்தை நோக்கி முன்னேறுவதில் தடையாய் அமைந்துள்ள காரணிகள் யாவை? (05 புள்ளிகள்)

(iii) 'காலநிலை மாற்றத்தினால் அதிக பாதிப்புக்குட்படக்கூடிய நாடுகள் பட்டியலில் இலங்கையும் உள்ளடக்கப்பட்டுள்ளது. காலநிலை மாற்றங்களினால் ஏற்படும் அனர்த்தங்கள் காரணமாக இலங்கையில் மொத்த உள்நாட்டு உற்பத்தி, அரசநிதி என்பவற்றில் ஏற்படத்தக்க தாக்கங்களைச் சுருக்கமாக விபரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) சீனா நடைமுறைப்படுத்தியுள்ள 'பட்டி மற்றும் பாதைத் திட்டத்தின்' (Belt and Road Initiative) பிரதான பண்புகளையும் அது இலங்கையின் மீது ஏற்படுத்துமென எதிர்பார்க்கப்படும் பொருளாதாரத் தாக்க விளைவுகளையும் சுருக்கமாக விளக்குக. (05 புள்ளிகள்)

10. (i) **வளர்ச்சிச் செயலாற்றம்:**

- அண்மை ஆண்டுகளில் பொருளாதார வளர்ச்சியாது எதிர்பார்த்ததை விடக்குறைவாகவே இருந்தது. கடந்த நான்காண்டுகளின் பொருளாதார வளர்ச்சி வீதங்கள் கீழே தரப்பட்டுள்ளன:
  2001 ஆண்டின் பின்னர் 2018 ஆண்டிலேயே பொருளாதார வளர்ச்சி வீதம் மிகக்குறைவாக இருந்துள்ளது.

| 2015 | 2016 | 2017 | 2018 | |
|---|---|---|---|---|
| 5.0% | 4.5% | 3.4% | 3.2% | **(01 புள்ளி)** |

(2018 இல்லாவிடினும் புள்ளி வழங்கவும்)

- ஏற்றுமதி ஊக்குவிப்பு வெளிநாட்டு நேரடி முதலீட்டைக் கவர்தல் பாதீட்டுக் குறைநிலையினையும் கடன் மட்டங்களையும் குறைத்தல் காரணிச்சந்தைகளை மீள உருவாக்கல் பொது நிருவாகத்தை வலுப்படுத்தல் மற்றும் சட்டவாட்சியை உறுதிப்படுத்தல் போன்றவற்றில் வளர்ச்சியை ஊக்குவிக்கும் சீர்திருத்தங்களை அறிமுகப்படுத்துவதையும் வளர்ச்சிக்கான தடைக்காரணிகளைக் கையாள்வதையும் காலதாமதப்படுத்தியமையானது அண்மைக்காலத்தில் இலங்கைப் பொருளாதாரத்தின் தேக்க நிலைக்கு பெருமளவில் பங்களித்துள்ளது.

- காலத்திற்குக்காலம் அறிமுகப்படுத்தப்பட்ட முரண்பாடானதும் எதிர்வு கூறமுடியாததுமான கொள்கைகள் காரணமாக முதலீட்டாளரின் உணர்வுகள் ஏமாற்றந்தரும் வகையில் மட்டமாக இருந்தது. இதற்கான காரணம் பெரும்பாலும் அரசியல் ரீதியானது.

- கூட்டமைப்பு அரசாங்கத்தின் கொள்கைத்தீர்மானங்கள் மிகவும் மந்தகதியிலேயே நகர்ந்தன. தீர்மானங்கள் எடுக்கப்பட்டாலுங்கூட அவை பெரும்பாலான சந்தர்ப்பங்களில் குளறுபடியான சமிக்ஞைகளை வழங்கின.

- வெளிப்புற எதிர்ப்புகளும் வேலை நிறுத்தங்கள் ஆர்பாட்டங்கள் ஆகிய பிரவாகங்களுடன் அடிக்கடி எழும் ஒரு பிரச்சினையாக உள்ளது. 2012-2014 காலப் பகுதியுடன் ஒப்பிடுகையில் 2015-2018 காலப்பகுதியில் வேலைநிறுத்தங்கள் காரணமாக தனியார் துறையில் இழக்கப்பட்ட மனித மணித்தியாலங்களின் எண்ணிக்கை 50,000 நாட்களிலிருந்து 80,000 நாட்களாக அதிகரித்தன.

- இலங்கைப் பொருளாதாரம் காலநிலை தொடர்பான அதிர்ச்சிகளுக்கு அடிக்கடி முகங்கொடுக்கும் நிலைக்கு ஆளாகியுள்ளதோடு அதனால் விவசாய விளைச்சல்கள் குறைவடைந்துள்ளன வாழ்வாதாரங்கள் இழக்கப்பட்டுள்ளன அத்துடன் அனர்த்தங்களுடன் தொடர்புடைய பேரழிவுகளையும் அடிக்கடி சந்திக்கிறது.

**(ஒன்றுக்கு 01 புள்ளி வீதம் இரு விளக்கங்களுக்கு 02 புள்ளிகள்)**

**பொதுப்படுகடனின் பேண்தகுதன்மை:**

- கடன் கட்டமைப்பு கணிசமானளவு இடரபாயங்களைக் கொண்டுள்ளது.
- இலங்கையின் மத்திய அரசாங்கத்தின் கடன் மட்டம் 2018ல் கணிப்பீட்டின்படி மொ.உ.உற்பத்தியின் 83.0 சதவீதமாக இருந்தது மிக அதிகமாகும் அத்துடன் கடன் கட்டமைப்பு அண்மைக்காலத்தில் மோசமடைந்துள்ளது. .

**(01 புள்ளி)**

- மத்திய அரசாங்கத்தின் வெளிநாட்டு நாணய வடிவிலான வெளிநாட்டுக்கடன் மொத்தக்கடனில் 51.3 வீதமாக மதிப்பிடப்பட்டுள்ளது. அத்துடன் மொத்தக் கடன்சேவையானது 2018ல் மொத்த வருவாயின் 88 வீதமாக மதிப்பிடப்பட்டுள்ளது. இலங்கையின் மொத்த நிதியிடல் தேவைகள் ஏனைய எழுச்சி பெற்றுவரும் பொருளாதாரங்களுடன் ஒப்பிடுகையில் பெரிதாக உள்ளது.

**(01 புள்ளி)**

- மேலும் நாடு மேல்மட்ட நடுத்தர வருமான மட்ட அந்தஸ்தை அடையும் போது அது வணிக ரீதியிலான அதிக செலவுடைய இடரபாயம் மிகுந்த கடன்களையே பெறமுடியும். இதன் விளைவாக வெளிநாட்டு நாணய கடன்களின் வட்டிவீத இடரபாயம் அதிகரிக்கும். மொத்த வெளிநின்ற கடன்களில் மிதக்கும் வட்டிவீதக் கடன்களின் பங்கு அதிகரிக்கும். சராசரி

வட்டிவீதம் அதிகரித்துள்ள அதேவேளை அதன் சராசரிமுதிர்வுக்கான காலம் (ATM) குறைவடைந்துள்ளது.

**(01 புள்ளி)**

- வெளிநாட்டு நாணய வணிகக் கடன்களைப்பூர்த்தி செய்வதற்குப் போதுமானஒதுக்குகள் தேய்வடைந்து சென்றுள்ளன.

**(01 புள்ளி)**

- அரசதுறை தொழில் முயற்சிகளின் (**SOE) கடன்கள் முக்கியமான இடரபாயமாக உள்ளது.** 2017 ஆண்டிறுதியில் உள்ள தரவுகளின் படி ஆறு பெரிய அரசதுறை நிறுவனங்களின் தாபனங்களின் (நிதிநிறுவனங்கள் தவிர்ந்த) மொத்தக் கடனளவு மொ.உ..உற்பத்தியின் 7.1 சதவீதமாக இருந்தது.அரசதுறை நிதிநிறுவனங்கள் உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் அவற்றின் இருப்பு நிலைக் குறிப்புகளுக்கேற்ப கடன்பெறலாம். நிதியல்லா நிறுவனங்கள் உள்நாட்டு வங்கித்துறையிலிருந்தே பிரதானமாகக் கடன் பெறுகின்றன. அரசதுறை தொழில் முயற்சிகளின் கடன்பெறலை வசதிப்படுத்த திறைசேரியானது வசதிக் கடிதங்களை வழங்கும். அண்மை ஆண்டுகளில் திறைசேரியினால் உத்தரவாதமளிக்கப்பட்ட கடன்கள் அதிகரித்து 2017 ஆண்டிறுதியில் மொ.உ.உற்பத்தியின் 6.7 வீத உயர் மட்டத்தில் இருந்தது.

**(01 புள்ளி)**

- பலதசாப்தங்களாக இலங்கையின் கடன் முகாமைத்துவம் உருவாகிவரும் சவால்களுக்கு முகங்கொடுக்கும் வகையில் உருவாக்கப்படவில்லை சந்தைகளைச் சென்றடைதல் சந்தை உருவாக்கம் புதிய கருவிகளின் பயன்பாடு சர்வதேச ரீதியில் பாதிக்கப்படுந்தன்மை என்பவற்றோடு செலவுகளும் இடரபாயங்களும் சேர்ந்து உருவாகின. எவ்வாறாயினும் நாட்டின் கடன் முகாமைத்துவ தொழிற்பாடு மற்றும் அமைப்புகள் புதிய சவால்களின் வேகத்திற்கு ஈடுகொடுக்கும் வகையில் அமையவில்லை. பொதுவான வகையில் கடன் முகாமைத்துவமானது ஒருங்கிணைக்கப்பட்ட நிறுவனரீதியிலான கட்டமைப்பொன்று இல்லாத நிலையில் திட்டமிடல் தொடக்கம் இடரபாயங்களை முகாமை செய்தல் வரையிலான ஒரு முழுமையான பார்வையைக் கொண்டிருக்கவில்லை. அத்தோடு சிதைந்து போயுள்ள நிறுவனரீதியிலான கட்டமைப்பு விரிவான கடன் முகாமைத்துவ உபாயத்தின் குறைபாடு என்பன முக்கிய இடரபாயங்களை ஏற்படுத்தியுள்ளன. அவை இதுவரை தீர்க்கப்படவில்லை.

**(01 புள்ளி)**

**(ஒன்றிற்கு 01 புள்ளி வீதம் ஏதாவது இரு விளக்கங்களுக்கு மொத்தம் 02 புள்ளிகள்)**

(ii) - இலங்கையின் ஏற்றுமதிச் செயலாற்றம் மிகவும் பலவீனமாக உள்ளது. இலங்கையின் ஏற்றுமதிகள் இன்னும் குறைந்த தொழில்நுட்ப ஏற்றுமதிப் பொருள்கள் சிலவற்றில் தங்கியுள்ளது. பொருளாதாரத்தின் ஏற்றுமதிக்கு எதிரான சார்புத்தன்மையானது போட்டித்தன்மையற்ற நாணயமாற்று வீதம் உயர்ந்த பயனுறுதிவாய்ந்த பாதுகாப்பு வீதம் என்பவற்றின் விளைவாக ஏற்பட்டது

- இறைக்கொள்கையானது வளர்ச்சியின் மீது வரையறைகளை ஏற்படுத்தியுள்ளது. காலப்போக்கில் அரசாங்க வருவாயில் ஏற்பட்டுள்ள நிலையான வீழ்ச்சியானது பொதுப்படுகடன் திரட்சியில் நிலையான அதிகரிப்பை ஏற்படுத்தியுள்ளது.

அதிலும் குறிப்பாக இடரபாயமிக்க சலுகையற்ற வெளிநாட்டுக் கடன்களின் அதிகரிப்பு.

- ஏற்றுமதி ஊக்குவிப்பு வெளிநாட்டு நேரடி முதலீடுகளைக் கவர்தல் பாதீட்டுக்குறைநிலை மற்றும் கடன் மட்டங்களைக் குறைத்தல் காரணிச் சந்தைகளை சீராக்கம் செய்தல் பொதுநிர்வாகத்தை வலுப்படுத்தல் சட்டவாட்சியை உறுதிப்படுத்தல் ஆகிய விடயங்களில் வளர்ச்சியை ஊக்குவிக்கும் சீராக்கங்களை அறிமுகப்படுத்தல் வளர்ச்சிக்கான தடைகளை நீக்குதல் என்பவற்றில் ஏற்படும் தாமதங்கள்.

- நிருவாகத்தடைகளும் வளர்ச்சியை பாதித்துள்ளது: இத்தடைகள் உள்நாட்டு வெளிநாட்டு முதலீடுகளைப்பாதித்துள்ளது.

- நிகழ்கால தொழிற்படையின் திறன் மட்டங்களும் உலகளாவிய ரீதியில் ஒருங்கிணைக்கப்பட்டுள்ள பொருளாதாரத்தின் தேவைகளுடன் பொருந்தவில்லை.

- உட்கட்டமைப்பின் தரம் அதனை அடைதல் சக்திவளத்தின் விலை போக்குவரத்தும் தொலைத்தொடர்பும் இலங்கையின் சிறிய நடுத்தர நிறுவனங்களின் நிதிகளை பெற்றுக்கொள்ளும் தன்மை என்பன தடைக்காரணிகளாக உள்ளன.

- சிதைந்து போயுள்ள நிதி நிலைமை மற்றும் அரசதுறை நிறுவனங்கள் வழங்கும் பொதுத்துறைச் சேவைகளின் குறைந்த தரம் என்பன வளர்ச்சியிலும் உற்பத்தித் திறனிலும் மேலதிக தடைகளை ஏற்படுத்தியுள்ளன.

- நீண்டகால பொரருளாதாரக் கொள்கைகளின் சீரற்ற தன்மையும் நிச்சயமற்ற தன்மையும்

**(ஒன்றிற்கு 01 புள்ளி வீதம் ஐந்து காரணிகளுக்கு மொத்தம் 05 புள்ளிகள்)**

(iii) - காலநிலைத்தரவுகள் இலங்கை முழுவதும் காலநிலை படிப்படியாக மாற்றமடைவதைக் காட்டுகின்றன. காற்று வெப்பம் உயர்தல் வருடாந்தப் படிவு வீழ்ச்சிமுறையில் மாற்றங்கள் மழைவீழ்ச்சிப் பரம்பலில் மாற்றங்கள் கடல் மட்டம் உயர்தல் என்பன அவற்றுள் சிலவாகும். காலநிலையில் ஏற்படும் இம்மாற்றங்களின் சமூக பொருளாதார விளைவுகள் - பயிர் விளைச்சலில் ஊழிய உற்பத்தித் திறனில் - தூரவீச்சுக்கொண்டவையாகும்.

- 2016 இன் இறுதிப்பகுதியிலிருந்து இலங்கை மிகத்தீவிரமான காலநிலை நிகழ்வுகளைச் சந்தித்துள்ளது. 2016 இலிருந்து மழைவீழ்ச்சி சராசரியை விடக் குறைந்துள்ளது. இதனால் நாடு பூராக வரலாறுகாணாத வரட்சிநிலை ஏற்பட்டுள்ளது. 2017 மே மாதத்தில் பருவப் பெயர்ச்சி மழை காரணமாக வெள்ளப் பெருக்கும் மண்சரிவுகளும் ஏற்பட்டன. இதனால் தென்மேற்குப் பிரதேசத்தில் 9000 இற்கும் மேற்பட்ட வீடுகள் பாதிக்கப்பட்டன. இரண்டு மில்லியனுக்கும் மேற்பட்ட மக்கள் இவ்விரு தீவிர வானிலை நிகழ்வுகளாலும் பாதிக்கப்பட்டனர்.

- காலநிலை அனர்த்தங்களும் பொருளாதார வளர்ச்சியைப் பாதித்தன. பணவீக்கத்தை அதிகரித்தன வர்த்தகக் குறைநிலையை மோசமடையச் செய்தன. 2016 டிசம்பர் மாதத்திலிருந்து இரண்டு நெல் பயிர்ச்செய்கைப்

போகங்கள் இடையுறுகளுக்கு உள்ளாகின இதனால் உள்நாட்டு அரிசி உற்பத்தி கடந்த 10 வருடங்களின் குறைவான பெறுமதியைப் பதிவு செய்தது 2017ல் ஏற்பட்ட வெள்ளத்தினால் மேலும் பாதிக்கப்பட்ட விவசாயத்துறை மொ .உ. உற்பத்தியானது 2017ல் 3.1 சதவீதத்தினால் வீழ்ச்சியடைந்தது. இது நாட்டின் மொத்த வளர்ச்சியிலும் வரி வருவாயிலும் பாதகமான விளைவுகளை ஏற்படுத்தியது.

- வரட்சியானது நாட்டின் மின்னுற்பத்தியை நீர் மின் வளத்திலிருந்து அனல்மின் மூலாதாரங்களை நோக்கி நகர்த்தியது. இதனால் எண்ணெய் இறக்குமதிகள் 560 மில்லியன் அமெரிக்க டொலர்களினால் அதிகரித்தது. அனல்மின் வலு உற்பத்தி காரணமாக இலங்கை மின்சார சபை 34 பில்லியன் ருபா நட்டத்தை எதிர் கொண்டது.
- 2017ல் இலங்கை காலனிலைக்காரணிகளால் விவசாயப் பொருளாதாரம் பாதிக்கப்பட்டதன் காரணமாக மெய் மொத்த உள்நாட்டு உற்பத்தியின் வளர்ச்சியில் ஒரு குறைவடையும் போக்கினை எதிர் கொண்டது. Economist சஞ்சிகை அதே ஆண்டில் வெளியிட்ட ஒரு கட்டுரையில் நாட்டின் பொருளாதாரத்தின் கீழ்நோக்கிய போக்கினை காலநிலைமாற்றத்தோடு தொடர்பு படுத்தியிருந்தது. வெள்ளப் பெருக்கு மண்சரிவுகள் மற்றும் வரட்சி என்பவற்றுடன் நாடு போராடியதன் காரணமாகவே வளர்ச்சி பின்தங்கியதாக கூறப்பட்டிருந்தது.
- 2014-2016 காலப்பகுதியில் 4.7 சதவீதமாகக் காணப்பட்ட சராசரி வளர்ச்சி வீதமானது 2017இன் முதல் அரையாண்டுப்பகுதியில் 3.9 சதவீதமாக துரித வீழ்ச்சி கண்டது. அதே ஆண்டின் இறுதியில் அது 3.1 சதவீதமாக மேலும் வீழ்ச்சி கண்டது.
- அனர்த்தத்திற்குப் பிந்திய மீட்பு நடவடிக்கைகள் கணிசமான செலவு அதிகரிப்புகளை ஏற்படுத்தியது. நேரடியற்ற செலவுகள் நீங்கலாக உடனடி மீட்பு மற்றும் மனிதாபிமான உதவி நடவடிக்கைகள் கடுமையாகப் பாதிக்கப்பட்ட வீட்டுத்துறையினருக்கான இலக்கிடப்பட்ட வருமான உதவிகள் உணவுக்கூப்பன்கள் பாதிக்கப்பட்ட சொத்துக்களை புனருத்தாரணம் செய்தல் என்பவற்றை உள்ளடக்கியிருந்தது.

**(ஒவ்வொன்றிற்கும் 02 புள்ளி வீதம் மூன்று சுருக்கக் குறிப்புகளுக்கு மொத்தம் 05 புள்ளிகள்)**

(iv) - பட்டி மற்றும் பாதை முயற்சி Belt and Road Initiative (BRI) என்பது புராதன பட்டுப்பாதைக்கட்டமைப்பை மீளக்கட்டியெழுப்பும் சீனாவின் முயற்சியாகும். இவ்வர்த்தகப்பாதை சீனாவை ஐரோப்பாவுடன் இணைக்கும் நிலம் மற்றும் கப்பற் பாதைகளைக் கொண்டிருந்தது. இதன் ஒரு கரம் 'Silk Road Economic Belt' (the Belt) சீனாவிலிருந்து மத்திய ஆசியாவின் ஊடாக ஐரோப்பாவை நோக்கி நீள்கிறது. மற்றொரு கரம் '21st Century Maritime Silk Road' (the Road), சீனாவிலிருந்து தென்கிழக்காசியா மத்திய கிழக்கு கிழக்காபிரிக்கா மற்றும் ஐரோப்பாவை மத்திய தரைக்கடல் இந்து சமுத்திரம் அத்திலாந்திக் சமுத்திரம் என்பவற்றின் வழியே 20 இற்கும் மேற்பட்ட நாடுகளுடன் இணைக்கிறது.

- சீனாவின் 4 டிரில்லியன் அமெரிக்க டொலர் பெறுமதியான இந்த வர்த்தக மற்றும் முதலீட்டுத் திட்டம் சீனாவின் 2013ல் அறிமுகம் செய்யப்பட்டது. இந்த BRI ஆனது ஆசிய ஆபிரிக்க நாடுகள் சீனா மற்றும் ஐரோப்பிய நாடுகளிடையே தொடர்பாடலை முன்னேற்றுவதில் கவனஞ செலுத்துகிறது. துறைமுகங்கள் மற்றும் வர்த்தகப்போக்குவரத்து என்பவற்றை முன்னேற்ற பாரியளவிலான உட்கட்டமைப்பு செயற்திட்டங்கள் ஊடாக இது நடைமுறைப்படுத்தப்படுகிறது.

- தரை மற்றும் கடற்பாதைகளை பாதைகள் புகையிரத வீதிகள் துறைமுகங்கள் என்பவற்றை முன்னேற்றுவதில் கூடிய கவனம் செலுத்தப்படுகிறது. இச்செய்திட்டமானது உலகின் 60 சதவீதமான சனத்தொகையைக் கொண்டுள்ள 65 நாடுகளை உள்ளடக்கியதாக உள்ளது.

**(ஒன்றிற்கு 01 புள்ளி வீதம் ஏதாவது இரு விடயங்களுக்கு மொத்தம் 02 புள்ளிகள்)**

**பொருளாதார விளைவுகள்**

புராதன காலத்திலிருந்தே இலங்கை கடல் பட்டுப்பாதையில் ஒரு முக்கிய தரிப்பிடமாகும் ஆசியாவையும் ஐரோப்பாவையும் இணைக்கும் உலகின் பரபரப்பான வர்த்தகப்பாதையில் அது அமைந்துள்ளது. இதனால் சீனாவின் BRI திட்டத்தில் முக்கிய பங்காற்றுகிறது. இலங்கைக்கு BRI திட்டத்தின் விளைவுகள் பற்றி நோக்கும்போது வர்த்தகம் முதலீடு சுற்றுலா என பல்வேறு விடயங்களை உள்ளடக்கலாம்

சீனாவின் BRI திட்டத்தின் கீழ் இலங்கை இரண்டு பேரளவு முதலீட்டுத் திட்டங்களை மேற்கொண்டுள்ளது. அம்பாந்தோட்டை துறைமுகம் மற்றும் கொழும்புத் துறைமுக நகரம். China Merchant Port Holdings (CMPH) மற்றும் இலங்கை அரசாங்கம் துறைமுகத்தில் ஒரு பொருளாதார வலயத்தை உருவாக்கத்திட்டமிட்டுள்ளன. ஓமான் நாட்டின் US$3.85 பில்லியன் முதலீட்டில் ஒரு எண்ணெய் சுத்திகரிப்பு நிலையம் US$100 million முதலீட்டில் ஒரு சீமெந்து உற்பத்தி பொறித்தொகுதி என்பன 2019 மார்ச் மாதத்தில் அறிவிக்கப்பட்டன.

கொழும்புத் துறைமுக நகரம் கடலிலிருந்து மீட்கப்பட்ட 269 எக்டேயர் நிலத்தில் ஒரு பெருநகரத்தை உருவாக்குவதை பிரதானமாகக் கொண்டுள்ளது. பூர்த்தி செய்யப்படும் போது நகரமானது குடியிருப்புகள் நிதி மற்றும் வியாபார நடவடிக்கைகளை உள்ளடக்கியதாக இருக்கும்.

இந்தியாவை அடுத்து சீனா இலங்கையின் இரண்டாவது மிகப்பெரிய வர்த்தகப்பங்காளியாக மாறியுள்ளது. சீனாவுக்கும் இலங்கைக்கும் இடையிலான தாராள வர்த்தக உடன்படிக்கை இருபக்க வர்த்தகத்தை உந்திச்செல்லும் என எதிர்பார்க்கப்படுகிறது.

அம்பாந்தோட்டையில் ஒரு கைத்தொழிற் பேட்டையை அமைத்தல் சீனாவின் முதலீட்டைக் கவர்ந்து தொழில் வாய்ப்புக்களைப் பெருக்கி வரிவருவாயை அதிகரிக்குமென எதிர்பார்க்கப்படுகிறது. அத்துடன் உள்நாட்டு பொருளாதாரத்தை தூண்டி இருபக்க மற்றும் பிராந்திய வர்த்தக விரிவாக்கத்திற்கு பங்களிப்புச் செய்யுமென கூறப்படுகிறது

- BRI நாடுகளுக்கும் கம்பனிகளுக்கும் பல்வேறு செயற்திட்டங்களில் குறிப்பாக உட்கட்டுமானங்களை உருவாக்குவது தொடர்பில் பங்குபற்ற கணிசமானளவு வாய்ப்புக்ளைப் பெற்றுத்தந்துள்ளது.

- BRI இலங்கை ஒரு பொருளாதார மையமாக மாறும் முயற்சியில் உதவலாம். அத்துடன் பிராந்திய வர்த்தக வசதிவழங்கும் மையப்புள்ளியாக அல்லது ஒரு உற்பத்தி மையப்புள்ளியாக மாற விரும்பும் கனவை நனவாக்க உதவலாம்

- BRI இலங்கை பெறுமதிச் சங்கிலியை உருவாக்குவதிலும் இணைந்து கொள்வதிலும் உதவி செய்யலாம்

- இலங்கை BRI இல் இணைந்து கொள்வதன் மூலம் சுற்றுலாத்துறையில் தெளிவான நன்மைகளைப் பெறலாம். 2010 இலிருந்து இலங்கைக்கு வரும் சீனச் சுற்றுலாப்பயணிகளின் எண்ணிக்கை கணிசமானளவு அதிகரித்துள்ளது.

- சமுத்திரவியல் வளங்கள் தொழில் நுட்பம் அறிவுப்பரிமாற்றம் தொழில் வாய்ப்புகள் போன்ற துறைகளிலும் BRI இலங்கைக்கு உதவலாம்.

**(ஒரு விடயத்திற்கு 01 புள்ளி வீதம் மூன்று விடயங்களுக்கு 03 புள்ளிகள்)**